# இந்தப் படத்தில் உள்ள இசைக்கருவியை கண்டுபிடியுங்கள்!



உங்களால் கண்டுபிடிக்க முடியவில்லையா? இசைக் கருவி, படத்தின் வலப் பக்கத்தில் உள்ள சிற்பத் தூண்களை இணைக்கும் நடன அசைவுப் பதிவுகளில்தான் உள்ளது. இந்த நடன அசைவுப் பதிவுகளை மென்மையாகத் தட்டினால் சங்கீத சுரங்கள் உண்டாகின்றன. இது எந்த நோக்கத்திற்காகப் படைக்கப்பட்டது என்பது நமக்குத் தெரியாதபோதிலும் நம்முடைய பண்டைய கட்டிடக் கலையின் மகத்தான எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது என்பதில் சந்தேகமில்லை. இதுபோன்ற மகத்தான கலைப்படைப்புகளுக்கு இந்தத் திருக்கோயிலுக்கு வாருங்கள். தமிழ்நாட்டின் தஞ்சை மாவட்டத்தில் உள்ள தாராசுரத்தில் தான் இத் திருக்கோயில் உள்ளது.

பண்டைய அதிசயங்களைப் பார்க்கவில்லையா?




experience yourself



For details on TTDC's attractive package tours with excellent accommodation and transport facilities, please contact:
TTDC, Tamilnadu Tourism Complex, Wallajah Road, Chennai - 600 002, Tamilnadu, India. Ph: 91-044-25388785 / 25361640.
Fax: 91-044-25382772. E-mail: ttdc@md3.vsnl.net.in Website: www.tamilnadutourism.org
Call: **Chennai** 91-044-25389857, 25383333 **New Delhi** 91-011-23745427 **Mumbai** 91-022-24110118 **Goa** 91-0832-2226390
**Bangalore** 91 080-22286181 **Hyderabad** 91-040-27667492 **Kolkata** 91-033-22437432



DIPR/865/DIS/04/FLAME

பங்கு பெறுங்கள்




& அம்புலிமாமா

# ஒலிம்பிக் புதிர்ப் போட்டி



விசேஷப் பரிசு

ஆக்சர் கம்ப்யூட்டர்

1வது பரிசு



கேமராக்கள்

2வது பரிசு



கேல்குலேட்டர்கள்

2004ம் ஆண்டு மே மாதம் அறிமுகப்படுத்தப் பட்ட நியூட்ரின் சந்தமாமா ஒலிம்பிக் புதிர்ப் போட்டி தொடர்ந்து ஆறு மாதங்களுக்கு சந்தமாமா இதழில் வெளிவரும். கீழ்க்காணும் கேள்விகள் ஒலிம்பிக் பந்தயங்களைப் பற்றிய உங்கள் ஆர்வத்தையும் அறிவையும் தூண்டுவனவாக அமையும். அவற்றுக்கு சரியான விடைகளைத் தேர்ந்தெடுத்து, நுழைவுக் கூப்பனைப் பூர்த்தி செய்து, நியூட்ரின் சாக்லெட் எக்ளேர்ஸின் ஐந்து மேலுறைகளுடன் சேர்த்து போட்டியிறுதித் தேதிக்குள் எங்களுக்குக் கிடைக்குமாறு கீழ்க்கண்ட முகவரிக்கு அனுப்பவும் நியூட்ரின் சந்தமாமா பரிசுப் போட்டி, சந்தமாமா இந்தியா லிமிடெட், 82, டிஃபென்ஸ் ஆபிசர்ஸ் காலனி, ஈக்காட்டுத் தாங்கல், சென்னை-600 097.

இது ஒரு அகில இந்தியப் போட்டி. ஒவ்வொரு மாதமும் சந்தமாமா இதழில் வெளி வரவிருக்கும் இந்தப் போட்டியில் கலந்து கொள்வீர். 3 கோனிகா கேமராக்கள், 10 கால்குலேட்டர்கள், 50 நியூட்ரின் ஸ்வீட் ஹாம்பர்கள் ஆகியவை முறையே முதல், இரண்டாவது, மூன்றாவது பரிசுகளாக ஒவ்வொரு மாதமும் வழங்கப்படும். இவ்வாறு ஐந்து மாதங்கள் போட்டி நடந்த பிறகு, 6வது மாதம் நடக்கவிருக்கும் மெகாப் பரிசுப் போட்டியில் வெற்றி பெறும் அதிருஷ்டசாலியான நபருக்கு மற்ற பரிசுகளுடன் விசேஷப் பரிசாக ஒரு கம்ப்யூட்டர் வழங்கப்படும். இந்த விசேஷப் பரிசைப் பெறும் நபர் 6 போட்டிகளிலும் கலந்து கொண்டவராக இருக்க வேண்டும். மெகாப் பரிசுப் போட்டியில் வெற்றி பெரும் நபர்களுக்கு டிசம்பர் மாதம் தபால் மூலம் செய்தி அனுப்பப்படும்.

## நியூட்ரின் சந்தமாமா ஒலிம்பிக் புதிர்ப் போட்டி-4

கீழ்க்கண்ட கேள்விகளை கவனத்துடன் படித்து, அதற்கான சரியான விடைகளை அருகிலுள்ள சதுரப் பெட்டியில் (✓) குறியிட்டு அனுப்பவும்.

1. சர்வதேச ஒலிம்பிக் போட்டியில் பங்கு பெற்ற முதல் இந்திய பெண்மணி யார்?

   ☐ பி.டி.உஷா ☐ அஞ்சு ஜார்ஜ் ☐ மேரி லீலா ராவ்

2. 1936ம் ஆண்டு பெர்லினில் நடந்த சர்வதேச ஒலிம்பிக் போட்டியில் முதன் முதலாக நான்கு தங்கப் பதக்கங்கள் பெற்ற அமெரிக்க நாட்டவர் யார்?

   ☐ டாம் டோலான் ☐ மைக்கேல் ஜான்ஸன் ☐ ஜெஸ்ஸி ஓவன்ஸ்

3. சர்வதேச ஒலிம்பிக் போட்டிகளில் ஆண்களுக்கான 'ஹை ஜம்ப்' நிகழ்ச்சியில் இதுவரை தாண்டப்பட்ட அதிகபட்ச உயரம் எத்தனை?

   ☐ 2.3 மீட்டர் ☐ 2.39 மீட்டர் ☐ 2.9 மீட்டர்

4. 1988ம் ஆண்டு சியூலில் நடந்த சர்வதேச ஒலிம்பிக் போட்டியில் மகளிருக்கான 100 மீட்டர் ஓட்டப்பந்தயத்தில் தங்கப் பதக்கம் பெற்ற அமெரிக்கப் பெண்மணி யார்?

   ☐ ஃப்ளோரன்ஸ் கிரிஃபித் ஜாய்னர் ☐ ஜாக்கி ஜாய்னர் கெர்ஸீ ☐ பௌலா இவான்

5. இந்த இதழில் வெளியாகியுள்ள நியூட்ரின் விளம்பரத்தில் ஆங்கில எழுத்து 'A' எத்தனை முறை வருகிறது?

   ☐ 13 ☐ 16 ☐ 12

**உங்களுக்குத் தெரியுமா?**



***பிரிட்டனைச்சேர்ந்த சார்லட் கூப்பர் என்ற பெண்மணி தான் சர்வதேச ஒலிம்பிக் போட்டிகளில் மகளிருக்கான பந்தயங்களில் வென்று முதன் முறையாகத் தங்கப் பதக்கம் பெற்றவர். 1900ம் ஆண்டு பாரிசில் நடந்த போட்டியில் இவர் மகளிருக்கான டென்னிஸ் ஒற்றையர் ஆட்டத்தில் தங்கப் பதக்கம் பெற்றார்.***

**போட்டியின் விதிமுறைகள்:** ●நியூட்ரின், சந்தமாமா நிறுவனங்களில் பணிபுரிபவர்களும் அவர்களது உறவினர்களும் இப்போட்டியில் பங்கு பெறக் கூடாது. ●நடுவர்களை நியமிக்கும் உரிமை நியூட்ரினையே சார்ந்தது. ●இந்திய குடிமக்களான 15 வயதுக்குட்பட்டவர்களே போட்டியில் கலந்து கொள்ளத்தகுதி பெற்றவர். ●இந்தப் போட்டியை நீட்டிக்கவோ அல்லது இடையிலே நிறுத்தவோ நியூட்ரினுக்கு விசேஷ உரிமை உண்டு. ●பங்கு பெறுபவர்கள் தங்கள் வயதுக்கு அத்தாட்சியாக தங்கள் பிறப்பு சான்றிதழின் நகலையும் சேர்த்து அனுப்ப வேண்டும். ●சரியான விடைகள் அனுப்பியுள்ளவர்கள் ஒன்றுக்கு மேலிருந்தால் வெற்றி பெறுபவர் சீட்டு குலுக்கித் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். ●வெற்றி பெற்றவர்களுக்கு தபால் மூலம் செய்தி அனுப்பபடும். ●பரிசுக்கு பதிலாக பணமாகத் தர இயலாது. ●பரிசுப் பொருட்களின் உத்திரவாதம் அதைத் தயாரிக்கும் நிறுவனங்களைப் பொறுத்தது. ●பங்கு பெறுபவர்கள் மாதத்திற்கு ஒரு நுழைவுக் கூப்பன் மட்டுமே அனுப்பிக்க முடியும். ●ஆறு போட்டிகளிலுமோ, அல்லது ஏதாவது ஒரு சில போட்டிகளிலுமோ பங்கேற்பது அவரவர்கள் விருப்பத்தைப் பொறுத்தது. ●இந்தப் போட்டியின் தொடர்பாக கூப்பனைத் தவிர மற்ற எந்த தபால் தொடர்புக்கும் அனுமதியில்லை. ●இந்த நுழைவுக் கூப்பனில் கையொப்பமிட்டு அனுப்பினால், நீங்கள் இந்தப் போட்டியின் விதிமுறைகளுக்குக் கட்டுப்படுகிறீர்கள் என்று பொருள். ●கடைசித் தேதிக்குப் பிறகு வரும் கூப்பன்கள் ஒப்புக் கொள்ளப்படாது. ●எந்த ஒரு போட்டியிலும், எல்லாக் கேள்விகளுக்கும் சரியான விடை அளிப்பவர்கள் யாருமே இல்லையெனில், அதிகபட்சம் சரியான விடைகள் அளித்திருப்பவர்களைத் தேர்வு செய்து அவர்களுக்குள் வெற்றி பெறும் அதிருஷ்டசாலிகள் சீட்டுக் குலுக்கல் மூலம் தேர்ந்தெடுக்கப் படுவார்கள். ●நடுவர்களின் தீர்ப்பே இறுதியானது.

**கடைசித் தேதி 31 ஆகஸ்ட் 2004**

பெயர்:..............................................................

வயது:............வகுப்பு:...............பிறந்த தேதி:................

வீட்டு முகவரி மற்றும் பின் கோடு : ..................................

.................................................................

கையொப்பம்: ...........................




India's largest selling sweets and toffees.



# அம்புலிமாமா

சிறப்புப் படைப்பாக மதிமுகம் : 108 ஆகஸ்ட் : 2004 புன்னகை : 8



















## பொருளடக்கம்



SUBSCRIPTION

**For USA and Canada**
**Single copy $2**
**Annual subscription $20**

***Remittances in favour of Chandmama India Ltd.***
to

Subscription Division
CHANDAMAMA INDIA LIMITED
No. 82, Defence Officers Colony
Ekkatuthangal, Chennai - 600 097
E-mail :
subscription@chandamama.org

**பரிசளிப்புச் சந்தா**

இந்தியாவைத் தவிர மற்ற எல்லா நாடுகளுக்கும் விமானத் தபால் வாயிலாக பனிரெண்டு இதழ்களுக்கு ரூ.900/- இந்தியாவிற்குள் ரூ.144/- **புக்போஸ்டில்** உங்கள் சந்தாத்தொகையை டி.டி வாயிலாகவோ அல்லது மணியார்டரிலோ **சந்தமாமா இந்தியா லிமிடெட்** என்ற பெயரை எழுதி அனுப்பவும்.

நிறுவியோர்
பி. நாகிரெட்டி, சக்ரபாணி

# சந்தாலி மொழியிலும் அம்புலிமாமா

சந்தால் என்னும் பழங்குடி மக்களின் மொழியான சந்தாலியிலும் அம்புலிமாமா வெளிவர உள்ளது என்பதை நம் வாசகர்களுக்கு மிக்க மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம். பன்னிரெண்டு மொழிகளில் ஏற்கனவே அம்புலிமாமா பிரசுரிக்கப் படுகிறது என்பது உங்கள் அனைவருக்கும் தெரிந்திருக்கும்.

சந்தாலியின் மொழி வடிவமான ஓல்சிக்கியில் சந்தோமாமோ என்ற பெயரில் நமது அம்புலிமாமாவைப் பிரசுரிக்க ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன. இந்த மொழி வடிவத்தை உண்டாக்கிய குரு கோம்கே பண்டிட் ரகுநாத் முர்முவின் நூறாண்டு பிறந்த தின விழா இந்த ஆண்டு மே மாதம் கொண்டாடப்பட்டது. இதையொட்டி வரும் செப்டம்பர் மாதத்திலிருந்து சந்தாலி மொழியில் அம்புலிமாமா வெளிவர இருக்கிறது. ஒரிஸ்ஸா, மேற்கு வங்காளம், ஜார்கண்ட், பீஹார், அஸ்ஸாம் ஆகிய மாநிலங்களில் பரவியுள்ள சுமார் ஒரு கோடி சந்தால் பழங்குடி மக்கள் முதன் முறையாகத் தங்கள் மொழியில் குழந்தைகளுக்கானப் பத்திரிகையைப் படித்து மகிழப் போகிறார்கள்.

அம்புலிமாமாவைத் தோற்றுவித்த நமது மதிப்பிற்குரிய திரு பி.நாகி ரெட்டி அவர்களும், திரு சக்கரபாணி அவர்களும் நமது இந்தியப் பாரம்பரிய சிறப்புக்களையும் கலாசாரத்தையும் பண்பாடுகளையும் நாடெங்கிலும் உள்ள அனைத்து சிறுவர்களும் அறிய வேண்டும் என்று பெரிதும் விரும்பினார்கள். இன்று ஏற்கனவே பன்னிரெண்டு மொழிகளில் அம்புலிமாமாவை வெளியிட்டு புதிதாக ஓர் இந்திய மொழியில் வெளியிட முயற்சிப்பதன் மூலம் அம்புலிமாமாவின் பிரசுரகர்த்தர்கள் அம்புலிமாமாவைத் தோற்று வித்தவர்களின் கனவை நனவாக்க முயல்கின்றனர்.

*ஆசிரியர் :* **விஸ்வம்**

# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி (மார்ச்)

## தேர்ந்தெடுக்கப் பட்ட சிறந்த கதை



இருவருக்குமிடையில் வந்த ஒரு நடுத்தர வயதுக்காரர், ''என் பெயர் சிவராமன். நானும் நீங்கள் வசிக்கும் அந்தத் தெருவில்தான் வசிக்கிறேன். ஆனால் ஒரு நாள்கூட உங்கள் இருவரையும் பார்த்தது இல்லையே!'' என்றார் அவர்.

''என் பெயர் ஆல்பர்ட். நான் மூன்றாவது வீட்டின் மேல் பகுதியில் வசிக்கிறேன். கல்கத்தாவில் பணிபுரிவதால் பிலாஸ்பூருக்கு எப்பொழுதுதாவது தான் வருவேன்'' என்றான்.

''என் பெயர் சாகுல் ஹமீது. நான் மூன்றாவது வீட்டின் கீழ் பகுதியில் சமீபகாலமாக தான் வசிக்கிறேன்'' என்றான்.

இரண்டு பேரையும் வியப்புடன் பார்த்தார் சிவராமன். அவர் ஆச்சரியப்படுவதைப் பார்த்த ஆல்பர்ட், ''என்ன சார், ஒரு கிறிஸ்துவன் இந்துக் கோவிலுக்கு வருகிறானே என்று ஆச்சரியப் படுகிறீர்களா? நான் பணிபுரிகிற இடத்தில் எனக்கு முஸ்லீம் மற்றும் இந்து மதத்தைச் சேர்ந்த பல நண்பர்கள் இருந்தனர். அவர்களுடன் சேர்ந்து எனக்கு மசூதிக்கும் கோவிலுக்கும் செல்லும் பழக்கம் ஏற்பட்டு விட்டது'' என்றான்.

ஆல்பர்ட் முடித்ததும் சாகுல் ஹமீதும் ''இந்தக் கடவுள் மிகவும் சக்தி வாய்ந்தவர் என்று கேள்விப் பட்டிருக்கிறேன். அதனால்தான் இவரை தரிசனம் செய்துவிட்டுப் போகலாம் என்று வந்திருக்கிறேன்'' என்றான்.

இருவரின் பேச்சைக் கேட்ட சிவராமன், ''நம்ம ஊரில் மதக்கலவரம் மறுபடியும் வந்து விடுமோ என்று பயந்து கொண்டிருந்தேன். ஆனால் உங்கள் இருவரையும் பார்த்த பிறகு அந்த பயம் போய் விட்டது.'' என்று சந்தோஷமாகக் கூறினார். இதற்கிடையில் மூவரும் கோவிலின் அருகில் வந்து விட்டிருந்தனர். ஒரே வானில் சூரியன், சந்திரன், நட்சத்திரங்கள் ஒளிர்ந்து கொண்டு இருப்பது போல் அந்தக் கோவிலில் சிவராமன், சாகுல் ஹமீது, ஆல்பர்ட் மூவரும் ஒளிர்ந்து கொண்டிருந்தனர்.

**என்.ஜீவா** (9ம் வகுப்பு) த/பெ. கே. நல்லையா, எண் 496, பூந்தமல்லி நெடுஞ்சாலை, அரும்பாக்கம், சென்னை- 600 106. தமிழ்நாடு.



# இரு சகோதரர்கள்

அது ஒரு மிகவும் சிறிய நாடு. அந்த நாட்டின் ஒரு மூலையில் ஒரு சிறிய கிராமம் இருந்தது. அந்த கிராமத்தில் மகாதேவன், சகாதேவன் என்ற இரு சகோதரர்கள் வசித்து வந்தனர். இருவரும் தங்கள் மனைவிகளுடன் ஒரே வீட்டில் ஒரே குடும்பமாக மிக ஒற்றுமையாக வாழ்ந்து வந்தனர்.

ஒரு நாள் மாலை நேரம் இருவரும் ஓய்வாக அமர்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அப்போது மகாதேவன் தன் தம்பியைப் பார்த்து, ''நாம் எத்தனை நாட்கள்தான் இந்த கிராமத்திலேயே வசிப்பது? நமக்கு வாழ்க்கையில் முன்னேற்றம் ஏற்பட வேண்டுமானால் இங்குள்ள நமது நிலங்களை விற்றுவிட்டு, நமது மன்னர் சந்திரஹாசனிடம் சென்று ஏதாவது வேலையில் அமர்வோம். இப்படிச் செய்வதன் மூலம் நிறைய வசதிகளுடன் தலைநகரத்திலே சொகுசாக வாழலாம்'' என்றான். சகாதேவனுக்கும் இந்த யோசனை பிடித்திருந்தது. அவன் ''நீ சொல்வது சரி. நாம் இருவரும் நல்ல வீரர்கள். மன்னருக்கு வீரச்செயல்கள் புரிபவர்களைக் கண்டால் மிகவும் பிடிக்கும். நாம் மன்னரிடம் பணி செய்தால், நமக்கு ஒளிமயமான எதிர்காலம் உண்டாகும்'' என்றான்.

அப்போது மகாதேவனின் மனைவி குறுக்கிட்டு, ''வெறும் வாய் வார்த்தைகளினால் பயனில்லை. மன்னர் மனம் கவரும்படி ஏதாவது வீரச் செயல்களைப் புரிந்து விட்டு அதன் பிறகு அவரிடம் சென்று அதைப் பற்றிக் கூறினால்தான், நீங்கள் விரும்புவது நடக்கும்'' என்றாள்.

அவள் சொல்வதும் சரியெனத் தோன்றியது. அப்போது சில நாட்களாகவே அந்த கிராமத்தில், பக்கத்துக் காட்டில்இருந்த புலி ஒன்று அடிக்கடி ஊருக்குள் வந்து அட்டூழியம் செய்து கொண்டிருந்தது. தமது வீரத்தைக் காட்ட இதுதான் வாய்ப்பு என்று மறுநாள் இரு

-சூரியவம்சி-

சகோதரர்களும் ஆயுதங்களுடன் காட்டை நோக்கிச் சென்றனர். காட்டினில் புலியைக் கண்டு பிடித்த அவர்கள் மிகுந்த துணிச்சலுடன் அதை எதிர்த்து நின்று கொன்று விட்டனர். இறந்த புலியை எடுத்துக் கொண்டு கிராமம் திரும்பியவுடன், கிராமத்தினர்கள் அவர்களுக்கு வீர வரவேற்பு செய்து, அவ்விருவரின் வீரத்தை வாயார மெச்சினார்கள்.

முன்னமே திட்டமிட்டபடி, அரசரிடம் சொல்வதற்கு இந்த வீரச் செயல் ஒன்று போதும் என முடிவு செய்த சகோதரர்கள், தங்கள் நிலங் களை விற்றுவிட்டு, இறந்த புலியின் தோலை எடுத்துக் கொண்டு குடும்பத் துடன் தலைநகரத்தை நோக்கிக் கிளம்பினர்.

தலைநகரில் ஓர்சத்திரத்தில் தங்கிக் கொண்டனர். மூன்றாவது நாள் புலியின் தோலை எடுத்துக் கொண்டு மன்னனைப் பார்க்க இருவரும் சென்றனர். ஆனால் அரண்மனை வாயிலை அடைந்த அந்த சகோதரர்களுக்கு ஓர் அதிர்ச்சி காத்திருந்தது. அரண்மனை வாயில் காவலர்கள் தங்களுக்கு ஏதாவது லஞ்சம் கொடுத்தால்தான் மன்னரைக் காண உள்ளே விடமுடியும் என்று பிடிவாதம் பிடித்தனர்.

என்ன தைரியம் இருந்தால், இப்படி நேரடியாக கையூட்டு கேட்கிறார்கள் என்று கோபம் வந்தாலும், வேறு வழியில்லாமல் இரண்டு பொற்காசுகளைக் கொடுத்து விட்டு, அரசவையில் நுழைந்தனர்.



மன்னரை சந்தித்துத் தன் வீரப் பிரதாபங்களைக் கூறி புலியின் தோலை அவருக்குக் காட்டி தான் எவ்வாறு துணிச்சலுடன் புலியை நேருக்கு நேர் நின்று கொன்றனர் என்பதையும் விவரித்தனர். தங்களது வீரச் செயலின் பொருட்டு அரசனின் படையில் தங்களுக்கு ஏதாவது வேலை தரும்படி கெஞ்சினர். ஆனால் மன்னர் அவர்கள் எதிர் பார்த்தபடி அவர்களது வீரச் செயலைக் கேட்டு மயங்கி விட வில்லை. மாறாக ''உங்களைப் போல் வீரர்கள் நாடெங்கும் ஆயிரக் கணக்கில் உள்ளனர். அவர்களுக் கெல்லாம் வேலைதர முடியுமா என்ன!'' என்று கூறி வெறும் இருநூறு தங்க நாணயங்களைத் தந்து அனுப்பி விட்டார். ஏமாற்றத்துடன் திரும்பிய சகோதரர்களைக் கண்டு, அவர்களது



மனைவிமார்கள் வருத்தமுற்றனர். மகாதேவனின் மனைவி, ''இப்போது என்ன செய்யலாம்? நமது கிராமத் திற்குத் திரும்பிப் போனால், நமக்குத் தான் அவமானம். பேசாமல் தலை நகரத்திலேயே தங்கி மன்னர் கொடுத்த பணத்தை வைத்து ஒரு வியாபாரம் செய்யலாம்,'' என்றாள்.

இதுவும் நல்ல யோசனைதான் என்று நினைத்த அந்த சகோதரர்கள், ஓர் உணவு விடுதி தொடங்கத் திட்டமிட்டனர்.

மறுநாளிலிருந்து வேலையை ஆரம்பிக்கலாம் என்றிருக்கையில் தொழில் தொடங்க அனுமதி பெற்றிருக்க வேண்டும் என்று சட்டம் இருந்தது. அதனால் அதற்கான அனுமதிப் பத்திரத்தைப் பெற நகர காவல் அதிகாரியிடம் இருவரும் சென்றனர். அப்போது மீண்டும் அவர்களுக்கு அதிர்ச்சி ஏற்பட்டது. அனுமதிப் பத்திரம் வழங்க காவல் அதிகாரி இருநூறு தங்கக்காசு லஞ்சம் கேட்டார்.

இப்படி தலைநகரத்தில் எங்கு பார்த்தாலும் லஞ்சப் பேய் தலை விரித்தாடுவதைக் கண்ட அந்த இரு சகோதரர்களுக்கும் கோபத்தில் ஆவேசமே வந்துவிட்டது. சகாதேவன், ''அண்ணா, இது அக்கிரமம். எங்கு பார்த்தாலும் லஞ்சம் கேட்கிறார்கள் இங்கே. இதைக் கேட்க ஆளேயில்லையா? மன்னர் என்னதான் செய்கிறார்? அவரைப் போய் நியாயம் கேட் போம்'' என்று கத்தினான். மகா தேவனும் தன் தம்பி சொல்வதை ஆமோதித்து, ''வா, போகலாம்'' என்று சொல்ல இருவரும் அரச வைக்குக் கிளம்பினர்.

வழக்கப்படி வாயில் காவலர்கள் அவர்களை உள்ளே அனுமதிக்க மீண்டும் லஞ்சம் கேட்டனர். இதை எதிர்பார்த்து திட்டமிட்டிருந்த இரு வரும், ''காவலர்களே, எங்களிடம் ஒரு பைசா கூட இல்லை. எங்களை தயவு செய்து உள்ளே விடு. நாங்கள் நினைத்தபடி மன்னரிடம் வேலை நடந்தால் இந்த மோதிரத்தைத் தருகிறோம்'' என்றனர். உடனே காவலர்கள் சகாதேவன் விரலிலிருந்த மோதிரத்தைப் பார்த்து அதை அப்போதே கொடுத்தால்தான் உள்ளே விட முடியும் என்று பிடிவாதம் செய்ய சகாதேவன் அந்த தங்க மோதிரத்தை அவர்களுக்குக்

கொடுத்து விட்டான். இவ்வாறு ஒருவழியாக அவையில் நுழைந்த சகோதரர்களை மன்னர் கண்டதும் அவருக்கு மிகவும் கோபம் வந்தது. ''மறுபடியும் எதற்காக வந்தீர்கள்?'' என்று மன்னர் சூடான குரலில் கேட்டார். உடனே சகாதேவன் நடந்த நிகழ்ச்சிகளை ஒன்று விடாமல் கூறி விட்டு ''மன்னரே காட்டில் வாழும் புலியை விடக் கொடியது உங்கள் தலைநகரில் தாண்டவமாடும் லஞ்சப் பேய். நான் சொல்வதை சோதிக்க விரும்பினால் உங்கள் வாயில் காவலர்களை சோதனை செய்யுங்கள். அவர்களிடம் என்னுடைய நீலக்கல் பதித்த தங்க மோதிரம் காணப்படும்'' என்றான்.

சகாதேவனது சொற்களைக் கேட்ட மன்னன் முதன்முறையாக மகிழ்ச்சி அடைந்தான். ''சபாஷ், உங்களைப் போல் துணிச்சல்காரர்களைத்தான் நான் தேடிக் கொண்டிருந்தேன். நீங்கள் சொல்வது உண்மை. புலியை விடக் கொடியது இந்த லஞ்சப் பேய். எனக்கே சில நாட்களுக்கு முன்தான் இந்த நகரத்தில் இவ்வளவு முறைகேடான செயல்கள் நடைபெறுகிறது எனத்தெரிந்தது.

ஆனால் லஞ்சம் கேட்பவர்களுக்கு மக்கள் கேட்டதைக் கொடுத்து தன் காரியத்தை சாதித்துக் கொண்டார்களே தவிர, யாரும் அதை எதிர்த்துக் குரல் எழுப்பவில்லை. நாட்டின் முறைகேடான செயல்களை எதிர்த்துக் குரல் கொடுக்க நாணயமான அதே சமயம் துணிச்சலுள்ள ஆட்கள் தேவை. உங்கள் நாணயத்தையும் துணிச்சலையும் மெச்சுகிறேன்'' என்றான்.

மகிழ்ச்சியில் உறைந்த அவ்விருவரையும் நோக்கி, மன்னன் தொடர்ந்தான். ''சகாதேவா, இன்று முதல் உன்னை லஞ்ச ஒழிப்புத் துறையின் முக்கிய அதிகாரியாகவும், உன் அண்ணன் மகாதேவனை நகரக்காவல் அதிகாரியாகவும் நியமிக்கிறேன். இப்போது மிகவும் மகிழ்ச்சிதானே!'' என்றான்.

இரு சகோதரர்களின் மகிழ்ச்சியைப் பற்றி கேட்கவும் வேண்டுமா!



# நமது பிரதம மந்திரி

கடந்த மே மாதம் 22ந் தேதி, டாக்டர் மன்மோஹன்சிங் இந்தியாவின் 14வது பிரதம மந்திரியாகப் பதவி எற்றார்.

ஜூன் 1991 முதல் மே 1996 வரை திரு நரசிம்மராவ் பிரதம மந்திரியாக இருந்தபோது, மன்மோஹன் சிங் அவர்கள் நிதி அமைச்சராக இருந்தார். அதற்குமுன் இந்திய ரிசர்வ் வங்கியின் ஆளுநராகவும், திட்டக் குழுவின் உப தலைவராகவும் பொறுப்பு வகித்து வந்தார்.

பாகிஸ்தானில் மேற்கு பஞ்சாப் மாநிலத்தில் காஹா என்ற கிராமத்தில் 1932ம் ஆண்டு செப்டம்பர் 26ந் தேதி அன்று திரு மன்மோஹன் சிங் பிறந்தார். 1941ம் ஆண்டு அவரது குடும்பம் அமிர்தசரசுக்கு குடியேறியது. உலர்ந்த பழங்களை விற்று வந்த அவரது குடும்பம் மிக எளிய வாழ்க்கை நடத்திக் கொண்டிருந்தது. ஒருமுறை குறித்த காலத்தில் கல்லூரிக்கான கட்டணத்தை செலுத்த முடியாததால் திரு மன்மோஹன்சிங் ஒரு ஆண்டு படிப்பையே நிறுத்தவேண்டி வந்தது. ஆனால் பள்ளியிலும் கல்லூரியிலும் படித்த காலங்களில் திரு மன்மோஹன் சிங் வகுப்பில் முதல் மாணவனாகத் திகழ்ந்தார். கல்வியில் சிறந்து விளங்கிய அவரைக் கண்டு, அவர் தந்தை திரு குருமுக்சிங் கோலி ஒரு முறை அவரிடம் ''நீ இந்த நாட்டின் பிரதமராகத் திகழ்வாய்'' என்று பெருமையாகக் கூறியதுண்டு. ஹோஷியார்பூரில் பஞ்சாப் பல்கலைக் கழகத்தில் பொருளாதாரத்தில் பட்டம் வாங்கிய அவர், தான் கல்விக்காக வாங்கிய கடனைத் திருப்பித்தர அதே கல்லூரியிலேயே ஆசிரியராகப் பணி யேற்றார்.



இதன் பிறகு அவர் இங்கிலாந்தில் இருந்த கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகத்தில் உயர் கல்வியைத் தொடர்ந்தார். பிறகு ஆக்ஸ்ஃபோர்ட் பல்கலைக் கழகத்தில் சேர்ந்து டாக்டர் பட்டமும் பெற்றார்.

1991ம் ஆண்டு முதல் நிதி அமைச்சராக பணியாற்றிய போது மிகச் சிறப்பான பொருளாதார சீர்திருத்தங்களை நமது நாட்டிற்காக அமல் ஆக்கினார். இந்தியாவின் அபாரமான தொழில் வளர்ச்சிக்கும் பல அன்னிய நாட்டு நிறுவனங்கள் இந்தியாவில் முதலீடு செய்ததற்கும் அவரே காரணமாக இருந்தார். மறுபடியும் அவ்வாறே திறம்பட பணிபுரிந்து இந்தியாவை மேன்மையுறச் செய்வார் என்று நம்புகிறோம்.

அம்புலிமாமாவின் லட்சக்கணக்கான வாசகர்கள் சார்பில் அவருக்கு எங்கள் வாழ்த்துக்களைத் தெரிவித்துக் கொள்கிறோம்.



# மாய மந்திரவாதி

## 9

*(தும்பிக்கை அறுந்த யானை மெய்க்காப்பாளனைத் துரத்த, அவன் உக்கிரதண்டனின் பின்புறம் ஒளிந்து கொண்டான். இதற்குள் மயக்கம் தெளிந்த துன்முகன் காட்டுக்குள் தப்பி ஓட, ஒரு சிறுத்தையிடம் சிக்கிக் கொண்டான். ஒரு வேடன் அந்த சிறுத்தை மீது அம்பு செலுத்த அது துன்முகனை நோக்கிப் பாய பயத்தில் துன்முகன் மரத்திலிருந்து கீழே விழுந்தான். அதன்பிறகு...)*

**ரா**ஜா துன்முகன், சிறுத்தை இருவரும் தரையில் விழுந்து கிடக்கக் கண்ட மெய்க்காப்பாளன் மற்றவர்களை நோக்கி ''யாராவது அந்த சிறுத்தையைக் கொல்லுங்கள்'' எனக் கத்தினான்.

பிறகு சிறுத்தையை ஒரு பார்வை பார்த்துவிட்டு துன்முகனைப் பார்த்து ''மகாராஜா ஜாக்கிரதை. காயம்பட்ட சிறுத்தை உங்களை ஏதாவது செய்து விடப்போகிறது'' என்றான். துன்முகன் எழுந்து சிறுத்தையிடம் இருந்து தள்ளி வெகு தூரம் ஓடினான். பிறகு திரும்பி மெய்க்காப்பாளனை நோக்கி, ''அடேய் நீ என்ன வேடிக்கை பார்க்கிறாயா? உடனே உரையிலிருந்து வாளை எடுத்து அந்த சிறுத்தையைக் கொல். அந்த வேடன் செய்வான் என்று சும்மா நிற்காதே. பார்ப்பதற்கு அவன் ஒரு முட்டாள் போலத் தெரிகிறான்'' என்று கோபத்துடன் கத்தினான். சிறிது நேரம் தரையில் விழுந்து கிடந்த சிறுத்தை மெதுவாக எழுந்து



துன்முகனை குறி வைத்து செல்லத் தொடங்கியது. உடனே வேடன் துன்முகனை நோக்கி ''என்னை முட்டாள் என்று சொல்லி விட்டீர்கள். ஆனால் பணத்தின் மதிப்புத் தெரியாத முட்டாள் நான் இல்லை. நீங்கள் எனக்கு கொடுப்ப தாகச் சொன்ன ஐந்து பொற்காசுகளை முதலில் கொடுங்கள்,'' என்றவன் பின் மெய்க்காப்பாளனை நோக்கி, ''இவரை மகாராஜா என்று கூப்பிடுகிறாயே! இவர் உண்மையி லேயே மன்னரா?'' என்று கேட்டான்.

இதற்குள் துன்முகனை நோக்கி மெதுவாக சென்று கொண்டு இருந்த சிறுத்தையைப் பார்த்துவிட்டு மெய்க் காப்பாளன் ''மகாராஜா அந்த சிறுத்தை உங்களையே குறி வைக்கிறது. நீங்கள் என்னுடைய வாளை எடுத்துக் கொள்ளுங்கள்'' என்று தன் வாளை நீட்டினான். தன் கேள்விக்குப் பதில் சொல்லாமல் அலட்சியம் செய்த மெய்க் காப்பாளனைக் கண்டு கோபம் அடைந்த வேடன், ''அடேய் நான் கேட்ட கேள்விக்கு நீ பதில் சொல்லா விடில், இந்த அம்பு உன் உயிரைக் குடித்துவிடும் ஜாக்கிரதை'' என்று கோபத்தில் கத்தினான்.

இதற்குள் தன்னை நோக்கி வந்து கொண்டிருந்த சிறுத்தையைத் தாக்கத் தயாரான துன்முகன், தன் மெய்க் காப்பாளன் தந்த வாளுடன் நாலடி முன்னே எடுத்து வைத்தான். பிறகு சிறுத்தையைக் கண்டு திடீரென பயம் ஏற்பட, பின் வாங்கத் தொடங் கினான். ''அடேய் வேடா! நான் தான் மகாராஜா துன்முகன். அதில் சந்தேகமேயில்லை. என் விதி, நான் இப்படி காட்டில் திரிந்து கொண்டிருக்கிறேன். நீ முதலில் விட்ட அம்பினால் அந்த சிறுத்தை சாகவில்லை. மற்றொரு அம்புவிட்டு அதைக் கொல்'' என்றான் துன்முகன்.

''அப்படியா மகாராஜா! நீங்கள் இதை ஏன் முன்பே கூறவில்லை. நீங்கள் உங்களுடைய படை வீரர்கள் இல்லாமல் தனியாக இப்படி காட்டிற்கு வந்திருக்கக் கூடாது'' என்றான் வேடன்.

இதற்குள் சிறுத்தை துன்முகனை நோக்கி விரைவாக ஓடத் துவங்க, துன்முகனும் பயந்து ஓட ஆரம்பித்தான். அப்பொழுது அவ் வழியே வந்து கொண்டிருந்த உக்கிர தண்டன் இதைக் கண்டதும் துன்முகனைப் பிடித்துக் கொண்டு

''துன்முகா, ஏன் இப்படி சிறுத்தையைக் கண்டு பயந்து ஓடுகிறாய்! நீ எல்லாம் ஒரு ராஜாவா?'' என்று இளக்காரமாகப் பேசிவிட்டு, பாய்ந்து வந்த சிறுத்தையை ஓங்கி ஓர் உதை விட்டான். உக்கிரதண்டன் உதைத்த வுடன் சிறுத்தை அப்படியே கவிழ்ந்து விழுந்தது. துன்முகன் பயத்தில் நடுங்கியவாறு ஏதோ சொல் வதற்கு வாய் திறந்தான் ஆனால் அதற்குள் அடிபட்ட சிறுத்தை கோபத்தில் உக்கிரதண்டன் மிது பாய ஆரம்பித்தது.

இதற்கிடையில் சிறுத்தையை லபக் என்று அதன் கழுத்தில் பிடித்துக் கொண்டான். துன்முகனைப் பார்த்து, ''நாட்டை ஆளும் உன்னை விட இது போன்ற பிராணிகள் எவ்வளவோ தைரியசாலியானவை'' என்றான். அப்பொழுது கொள்ளைக்காரர்களின் தலைவனான நாகமல்லன் தனது அடியாட்கள் இரண்டு பேருடன் அங்கு வந்து சேர்ந்தான். அவன் பின்னால் மாயக்கரடியும் வந்து சேர்ந்தது. துன்முகன் அருகே வந்த நாகமல்லன் ''நீங்கள் மகாராஜா என்று தெரிந்து கொண்டோம். உங்களை பத்திரமாக உங்கள் ராஜ்ஜியத்திற்கு அழைத்துச் செல்கிறோம். எங்களுக்கு ஏதாவது பரிசு கொடுங்கள்'' என்றான்.

இந்த வார்த்தைகளைக் கேட்ட வுடன், கோபத்தில் சீறி எழுந்தது மாயக்கரடி. ''அட மானிடப் பதர்களா! கேளுங்கள். இந்த துன்



முகனின் தலையை நான் எடுத்துக் கொண்டு மந்திரவாதியிடம் செல்ல வேண்டும். நீ இவன் உடலைத்தான் தலைநகருக்கு எடுத்துச் செல்ல வேண்டும். உனக்கு என்ன பரிசு கிடைக்கும் என்று தெரியுமா? நன்றாகக் காதைத் தீட்டிக் கொண்டு கேள்! இந்த மன்னனின் வாரிசுகள் உன் தலையை வெட்டி விடுவார்கள்,'' என்று கோடாலியைத் தூக்கிக் கொண்டு குதித்தது. ''ஆகா, மறந்து விட்டோம்.'' என்ற உக்கிரதண்டன் தன் கையில் பிடித்திருந்த சிறுத்தையை தொலைவில் எறிந்து விட்டு நாலாபுரமும் கூடியிருந்தவர் களை ஒருமுறை பார்த்துவிட்டு, ''நான் ஒன்று சொல்கிறேன் கேளுங்கள். இப்படிப்பட்ட இக் கட்டான சூழ்நிலையில் சிக்கியுள்ள துன்முகனைப் பார்த்தால் பரிதாபமாக உள்ளது. இவனது தலையை



வெட்டுவது என்பது சரியாகத் தோன்றவில்லை. உங்கள் அபிப் பிராயம் என்ன?'' என்று கேட்டான்.

கரடியைத் தவிர மற்றவர்கள் உக்கிரதண்டனின் வார்த்தைகளை ஆமோதித்தார்கள். மாயக்கரடி மட்டும், சற்று வருத்தத்துடன், ''அப்படியென்றால் என் நிலமை? மிகவும் பலசாலியான மந்திரவாதி தன் மந்திர சக்தியால் மனிதனாக இருந்த என்னை ராஜாவின் தலையை துண்டிக்க வேண்டும் என்பதற்காகவே மாயக்கரடியாக மாற்றி விட்டார். இப்பொழுது நான் அவரது கட்டளைக்குக் கீழ்ப்படியாமல் வெறுங்கையுடன் சென்றால் மந்திர வாதி என்னை சும்மா விடமாட்டார். ஒன்று என் தலையை சீவி விடுவார் அல்லது என்னை நிரந்தரமாக கரடியாகவே இருக்குமாறு செய்து விடுவார். தயவு செய்து என்னுடைய நிலமையை யோசித்துப் பாருங்கள்,'' என்றது. ''ஆமாம். கரடியார் சொல் வதும் உண்மை தான். என்ன செய்யலாம்?'' என்று உக்கிரதண்டன் யோசித்தான்.

அப்போது மெய்க்காப்பாளன், ''எனக்கு ஒரு நல்ல யோசனை தோன்றுகிறது, சொல்லட்டுமா? மன்னரை உயிருடன் கரடியார் அழைத்துச் செல்லட்டும். பிறகு மன்னரை என்ன செய்வது என்பதை மந்திரவாதி தீர்மானிக்கட்டும்,'' என்றான்.

''இதுதான் நல்ல யோசனை. அப்படியே செய்வோம், கரடியாரே!'' என்றான் உக்கிரதண்டன். ''சரிதான். இந்த அடர்ந்த காட்டில் துன்முகனை பத்திரமாக நான் எப்படி அழைத்துச் செல்வேன்? இவன் என்னை ஏமாற்றி விட்டு தப்பிச் செல்லக் கூடும். அதற்கெல்லாம் இடம் தராமல் இவனைக் கொன்று விடுவதே சரி,'' என்றது கரடி. ''உக்கிரதண்டரே, நீங்கள்தான் என்னைக் காப்பாற்ற வேண்டும்'' என்று துன்முகன் உக்கிர தண்டன் பின்புறம் ஒளிந்து கொண்டான். உடனே உக்கிரதண்டன் ''கரடியாரே, நான் சொல்வதைக் கேள். துன்முகனை அழைத்து வரும் பொறுப்பு என்னுடையது. நீ உன்னுடைய வாகனமாகிய தும்பிக்கை அறுந்த யானையின் மீது ஏறி மந்திரவாதியை நோக்கிச் செல். நாங்கள் உன் பின்னே நடந்து வருகிறோம்'' என்றான். அங்கிருந்து கிளம்பிவதற்கு முன் உக்கிர

தண்டரிடம் ''உக்கிர தண்டரே, வார்த்தையை நீங்கள் கண்டிப்பாக காப்பாற்றுவீர்கள்தானே? நான் இப்பொழுது என் வாகனத்தில் கட்டியிருக்கும் கயிறை அவிழ்த்து இங்கு கொண்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டுக் கிளம்பியது கரடி.

இதற்குள் அங்கு வந்த வேடன், ''நீ அவசரத்தில் தவறுதலாக யானையின் அருகில் சென்று விடாதே. பேச்சு சுவாரசியத்தில் நீங்கள் இருவரும் சற்றுத் தொலைவில் சிங்கத்தின் கர்ஜனையையும் யானையின் பிளிரலையும் நீங்கள் கேட்க மறந்து விட்டீர்கள் கரடியே, உன்னுடைய வாகனமான யானையை சிங்கம் தாக்குகிறது. வாருங்கள் பார்க்கலாம்'' என்று கூறவே, அனைவரும் யானை இருந்த இடத்திற்கு ஓடினர்.

அங்கு உண்மையாகவே ஒரு சிங்கம் கால்கள் கட்டப்பட்டிருந்த யானையின் மீது தாக்குதல் நடத்திக் கொண்டிருந்தது. ஒரே பாய்ச்சலில் கரடி சிங்கத்தின் மீது பாய்ந்து தன் கோடாலியை வீசியது. ஆனால் குறி தவறி கோடாலி சிங்கத்தின் ஒரு காலில் மட்டுமே பட்டது. இப்போது காயம்பட்ட சிங்கம் கரடியைத் தாக்க ஆயத்தமானது. உடனே வேடன் தன் அம்பினால் அந்த சிங்கத்தை வீழ்த்தி விட்டான். கரடியும் வீரத்துடன் தன் கோடாலியை வீசி சிங்கத்தின் கழுத்தைத் துண்டித்தது. மீண்டும் கோடாலியால் சிங்கத்தைத் தாக்க முயற்சித்த கரடியை வேடன் தடுத்து, ''எனக்கு சிங்கத்தின் தோல் முழுமையாக வேண்டும். அதை வீணாக்கி விடாதே'' என்று தடுத்து விட்டான்.



மாயக்கரடி வேடனை நோக்கி வியப்புடன் ''பலே, பிரமாதம்! இவ்வளவு நன்றாக குறி பார்த்து அம்பு விடுகிறாயே!! சபாஷ்!! நீ என்னுடன் சந்திரசிலாவுக்கு வா. உன்னுடைய திறமையை மன்னருக்குக் காட்டி உனக்கு ஏதாவது வெகுமதி கிடைக்கும்படிச் செய்கிறேன்'' என்றது உக்கிரதண்டன், ''பரவா யில்லை கரடியாரே, உங்களுக்கு ஒரு நல்ல சேவகன் துணைக்குக் கிடைத்து விட்டான்'' என்றான்.

கரடி இப்போது நாகமல்லனை நோக்கி, ''நாகமல்லா உன்னுடைய ஆட்களைக் கொண்டு என் யானை யின் கால் கட்டுகளை அவிழ்த்து விடு'' என்று கட்டளையிட்டது. ''அது முடியாது கரடியாரே, கட்டு

களை அவிழ்த்தவுடன் யானை எங்களையே தூக்கிப்போட்டு மிதித்து விடும்'' என்று நாகமல்லன் மறுத்தான். ''சரி சரி, நானும் வருகிறேன்'' என்று கூறிவிட்டு கரடியும் யானையிடம் சென்றது. யானையின் கால் கட்டுகளை அவிழ்த்தவுடன் கரடி ஜம்மென்று யானையின் மேல் அமர்ந்தது. பிறகு வேடனை நோக்கி, ''உனக்கு இந்தக் காட்டில் நன்றாக வழி தெரியும் அல்லவா! நீயும் என்னுடன் யானை மீது அமர்ந்து கொள்'' என்று சொல்லிவிட்டு, உக்கிரதண்டனை நோக்கி, ''துன்முகனை பத்திரமாக அழைத்து வருவது உன் பொறுப்பு'' என்றது.

''அதைப் பற்றிக் கவலைப் படாதே. நான்மந்திரவாதியை சந்திக்க விரும்புகிறேன். ஆகவே நீ யானை மீது அமர்ந்து முன்னால் எங்களை வழி நடத்திச் செல். நாங்கள் உன் பின்னே நடந்து வருகிறோம்'' என்றான் உக்கிரதண்டன். ''ஆகா, நன்றாகச் சொன்னாய். எனக்கு துன்முகன் முக்கியம். அவனை நீ பத்திரமாக அழைத்து வருவாயேயானால் அதுவே எனக்கு போதும் மற்றவர்களைப் பற்றி எனக்கு அக்கறையில்லை. அவர்கள் தங்கள் விருப்பப்படி எங்கு செல்ல விரும்பினாலும் அங்கு அவர்கள் செல்லலாம்'' என்றது கரடி.

பிறகு யானை மீது அமர்ந்த வேடனும், கரடியும் முன்னே செல்ல மற்றவர்கள் பின்னே நடந்து வந்தனர். யானை வேகமாக நடந்து சென்றதால் நடந்து வந்தவர்கள் கொஞ்சம் பின் தங்கி விட்டனர். அந்த சமயம், திடீரென காட்டுக்குள்ளிருந்து, எங்கிருந்தோ இரண்டு யானைகள் கரடியின் முன்னே தோன்றி வழி மறித்தன. அந்த யானைகள் மீது நான்கு நபர்கள் சவாரி செய்து கொண்டு வந்தனர். அவர்கள், ''உதயகிரி மகாராஜா வாழ்க'' என்று கோஷமிட்டுக் கொண்டே வந்து, கரடியின் மீது சராமாரியாக அம்புகளை எய்யத் தொடங்கினர்.

(தொடரும்)






# எது சிறந்த அழகு?

தன் முயற்சியில் சற்றும் தளராத விக்கிரமன் மீண்டும் மரத்தின் மேல் ஏறி அதில் தொங்கும் உடலைக் கீழே வீழ்த்தினான். பின் கீழே இறங்கி அவன் அதை சுமந்து கொண்டு மயானத்தை நோக்கிச் செல்லுகையில் அதனுள் இருந்த வேதாளம் எள்ளி நகைத்து, ''மன்னனே நீ அறிவாளி என்பதில் சந்தேகம் இல்லை. உலகில் நல்லது எது கெட்டது எது என்று நன்றாக அறிந்தவன் நீ. ஆனால் அப்படி இருந்தும் இந்த இரவு நேரத்தில் பயங்கர மயானத்தில் அயராமல் ஏன் சுற்றித் திரிகிறாய் என்று எனக்குப் புரியவில்லை. மனிதன் எவ்வளவு அறிவாளியாக



இருந்தும் சில சந்தர்ப்பங்களில் சிந்திக்கும் திறனை இழந்து உன்னைப் போல் இவ்வாறு நடப் பார்கள் போலும். உன்னைப் போலவே இருந்த ஜயந்தன் என்ற ராஜகுமாரனின் கதையைச் சொல்கி றேன், கேள்'' என்று கதை சொல்ல ஆரம்பித்தது.

முன்னொரு காலத்தில் ரகுவர்மன் என்ற மன்னன் காஞ்சனபுரியைத் தலைநகரமாகக் கொண்ட மிகப் பெரிய சாம்ராஜ்ஜியத்தை ஆண்டு வந்தான். இரண்டு பெண் குழந்தை களுக்குப் பின் அவனுக்கு அழகே உருவான ஓர் ஆண் குழந்தை பிறந்தது. ஜயந்தன் என்று அந்தக் குழந்தைக்குப் பெயரிட்டு கண்ணுங் கருத்துமாய் வளர்த்து வந்தான். ஜயந்தன் எவ்வளவு அழகாக இருந்தானோ, அவ்வளவு நல்லவனாகவும் தார்மீக சிந்தனைகள் உள்ளவனாகவும் இருந் தான். குருகுலத்தில் பயின்று திரும்பிய ஜயந்தனுக்கு முடிசூட்டி அவனை அரியணையில் அமர்த்த அவனது தந்தை விருப்பம் கொண்டார். ஆனால் ஜயந்தனுக்கு உடனே முடிசூட்டிக் கொள்ள விருப்பமில்லை. தன் தந்தையின் அதிகாரத்துக்கு உட்பட்ட நாடு நகரங்களை எல்லாம் சுற்றிப்பார்த்து குடிமக்களோடு நேரிலே பழகி, அதன்பிறகு முடிசூட்டிக் கொள் வதாக இருந்தான். அவன் விருப்பத் திற்கு இணங்கிய அவன் தந்தை அவனை அவ்வாறு செய்ய அனுமதித் தார். தனக்கு வேண்டிய பொருட் களை எடுத்துக் கொண்டு ஜயந்தன் ஒரு குதிரையில் ஏறிக் கிளம்பினான். ராஜ்ஜியத்தின் கிழக்குப் பகுதியில் இருந்த மலைத்தொடரில் காஞ்சன கிரி என்ற நெடிதுயர்ந்த ஒரு மலைச் சிகரம் இருந்தது. அந்த சிகரத்தின் உச்சியில் ஒரு பழம் புகழ் பெற்ற அம்மன் கோயில் இருந்தது. அந்த அம்மனுக்கு காத்தியாயினி என்று பெயர். அந்த அம்மனை தரிசிக்க ஜயந்தன் மிகவும் விருப்பம் கொண்டான். ஆகவே காஞ்சன கிரியை நோக்கிப் பயணம் செய்யத் தொடங்கினான்.

மலைச்சிகரத்தை அடைந்த ஜயந்தன் அங்கிருந்த எழில் கொஞ்சும் இயற்கைக் காட்சிகளைக் கண்டு பரவசம் அடைந்தான். அம்மன் கோயிலுக்கு எதிரில் இருந்த தடாகத்தில் நீராடிய ஜயந்தன் அம்மனை தரிசனம் செய்தான்.

அப்போது அங்கு கோயில் பிரகாரத்தி லிருந்து ஓர் இனிமையான வீணைஒலி கேட்டது. எங்கிருந்து வருகிறது இந்த ஒலி என்று தேடிச் சென்ற ஜயந்தனின் கண்களில் அழகே உருவான ஓர் அப்சரஸ் தென்பட்டாள். கோயில் பிரகாரத்தில் வீணையை மீட்டிக் கொண்டு அமர்ந்திருந்த அந்த எழில் ஓவியம் போன்ற பெண்மணி ஜயந்தனைக் கண்டு வீணை மீட்டு வதை நிறுத்திவிட்டு வியப்புடன் எழுந்தாள்.

''நான் ஒரு கந்தர்வப் பெண். என் பெயர் சித்திரலேகா. தாங்கள் யார் எனத் தெரிந்து கொள்ளலாமா?'' என்று தன் இனிய குரலில் கேட்டதும், ஜயந்தன் தன்னைப் பற்றிய விவரங்களை அவளுக்கு எடுத்துரைத்தான். அவன் சொன்ன வார்த்தைகளைக் கேட்டுவிட்டு சித்திர லேகா அவனை நோக்கி, ''எந்த கந்தர் வனையும் எனக்குப் பிடிக்காததால் நான் இதுவரை மணம் புரிய வில்லை. ஆனால் இன்று உங்கள் அழகைக் கண்டு என் மனதை பறி கொடுத்து விட்டேன். என்னை நீங்கள் திருமணம் செய்து கொள் வீர்களா?'' என்று ஆசையுடன் கேட்டாள். அதைக் கேட்ட ஜயந்தன் புன்முறுவலுடன், ''சித்திரலேகா, காஞ்சனாபுரியின் இளவரசனான எனக்கு என் நாடும் நாட்டு மக்களும் தான் முக்கியம். என் நாட்டையும் மக்களையும் பற்றித் தெரிந்து கொள்வ தற்காக பல ஊர்களுக்கு நான் பயணம் சென்று கொண்டிருக்கிறேன். எனக்கு இப்போது திருமணத்தில் நாட்டம்



இல்லை'' என்று மறுத்து விட்டான். ஆனால் சித்திரலேகா அவனை விடவில்லை. ''நீங்கள் பயணம் செய்யும் இடங்களுக்கு என்னையும் அழைத்துச்செல்லுங்கள். அதுவாவது செய்யலாம் இல்லையா?'' என்று கெஞ்சிக் கேட்கவும் அதை மறுக்க மனம் இல்லாமல் ஜயந்தன் அவளையும் தன்னுடன் அழைத்துச் சென்றான். செல்லும் இடங்களில் எல்லாம் நாட்டு மக்களின் குறை களையும் கஷ்டங்களையும் பற்றி ஜயந்தன் விசாரிப்பதும் அவர்களுக்கு உதவி செய்வதையும் பார்த்து, சித்திரலேகா மனம் நெகிழ்ந்தாள். ஜயந்தன் மன்மதனை ஒத்த அழகன் மட்டுமல்ல, குணத்திலும் அவன் தங்கக் கம்பி என்று அறிந்து கொண்டாள். ஒருநாள் காட்டு வழியே அவர்கள் இருவரும் பயணம் சென்று



கொண்டு இருக்கும் போது, ஓர் அவலட்சணமான இளம் பெண் சோகத்துடன் அமர்ந்திருக்கக் கண்டனர். ஜயந்தன் அவளைப் பற்றி விசாரித்ததும் ''நான் பிறவியில் இருந்தே இவ்வாறு அழகற்றவளாக இருக்கிறேன். ஆனால் என் புறத் தோற்றத்தைப் பொருட்படுத்தாமல், என்னை ரவி என்ற இளைஞன் காதலிக்கிறான். என்னைத் திருமணம் செய்து கொள்ளவும் தயாராக இருக்கிறான். ஆனால் அவன் தாய்க்கு என்னை மருமகளாக ஏற்றுக் கொள்ள விருப்பமில்லை. ரவி என்னை மணம் புரிந்தால் தான் தற்கொலை செய்து கொள்வதாக அவள் பயமுறுத்து கிறாள். ஆகவே வாழ்க்கையில் வெறுப்பு அடைந்து என் உயிரை மாய்த்துக் கொள்ள காட்டுக்கு வந்தேன். ஆனால் தற்கொலை செய்து கொள்ளவும் தைரியம் இல்லை எனக்கு'' என்று தன் சோகக் கதையை விவரித்தாள். அவள் கதையைக் கேட்டு அனுதாபமுற்ற ஜயந்தன் சித்திரலேகாவை நோக்கி, ''உன்னால் இவளை அழகியாக மாற்ற முடியுமா? நீ கந்தர்வப் பெண் அல்லவா! உன்னிடம் அந்த சக்தி இருக்குமே!'' என்று வினவ.

சித்திரலேகா சரியென்று தலை அசைத்து பெண்ணின் தலையை மூன்று முறை தொட்டாள். உடனே அந்தப் பெண் ஒரு அழகான பெண்ணாக மாறி விட்டாள். ஆனால் சித்திரலேகா அவலட்சணமாக மாறி விட்டாள். அவளைப் பார்த்த ஜயந்தன் திடுக்கிட்டுப் போனான். சித்திரலேகா தனது சக்தியினால் தனது அழகை தியாகம் செய்து, வழியில் கண்ட பெண்ணை அழகாக மாற்றி விட்டாள் என்று புரிந்து கொண் டான். ''நீ ஏன் இப்படியொரு தியாகத்தை செய்தாய்?'' என்று ஆச்சரியத்துடன் ஜயந்தன் அவளைக் கேட்டான். அதற்கு சித்திரலேகா ''ஜயந்தா! உங்களுடன் பழகி உங்களது நல்ல குணம் எனக்கும் வந்து விட்டது.

பிறருக்காக தியாகம் செய்வதிலும் பிறருக்கு உதவுவதிலும் ஆனந்தம் ஏற்படகிறது என்ற உண்மையை உங்களுடன் பழகியதிலிருந்து தெரிந்து கொண்டேன். அதனால்தான் அந்தப் பெண்ணின் மகிழ்ச்சிக்காக என் அழகினைத் தியாகம் செய்து விட்டேன்'' என்று பெருமையுடன்

கூறினார். அவளது வார்த்தைகளைக் கேட்ட ஜயந்தன் உணர்ச்சி வசப்பட்டு ''சித்திரா, முன்னைவிட என் கண்களுக்கு இப்போதுதான் நீ மிக அழகாகத் தெரிகிறாய். உன்னை மணந்து கொள்ள நான் ஆசைப் படகிறேன். சம்மதமா?'' என்று கேட்டான்.

இவ்வாறு அவன் கேட்டவுடனேயே சித்திரலேகா தன் பழைய மோகன உருவத்தை மீண்டும் பெற்று விட்டாள்.

கதையைக் கூறி முடித்ததும், வேதாளம், ''மன்னா, ஜயந்தன் மன்மதனுக்கு நிகரான அழகு படைத்தவன். அவன் அழகில் ஒரு கந்தர்வப் பெண் மயங்கிப் போய் தன்னைத் திருமணம் புரியுமாறு கேட்ட போது ஜயந்தன் மறுத்து விட்டான். ஆனால் அதே கந்தர்வப் பெண் விகாரமான உருவத்திற்கு மாறியவுடன் அவளைத் திருமணம் புரிய தானே வலியவந்தான். நீயே சொல்! இந்த ஜயந்தனின் போக்கு பைத்தியக்காரத்தனமாக இல்லை? இந்தக் கேள்விக்கு விடை தெரிந்தும் நீ சொல்லாமல் இருந்தால் உன் தலை வெடித்து சுக்கு நூறாகும்'' என்றது.

உடனே விக்கிரமன் ''ஜயந்தனின் இந்தச் செயல் அவன் எவ்வளவு உத்தமமானவன் என்று காட்டுகிறது. அவனுக்கு மூளைக்கோளாறு என்று நீ நினைத்தால் அது உன் தவறு. புறத் தோற்றத்திற்கு என்றுமே ஜயந்தன் மதிப்பு அளித்ததில்லை. புற அழகைக் காட்டிலும் அக அழகையே ஜயந்தன் விரும்பினான். முதன்முறை சித்திரலேகாவைப் பார்த்தபோது அவள் புற அழகு அவனைக் கவர வில்லை.

ஆகவே திருமணத்திற்கு அவன் ஒப்பவில்லை. ஆனால் சித்திரலேகா எப்போது தன் அழகை இழந்து விட்டு தியாகம் என்னும் ஆபரணம் அணிந்து ஒளிர்ந்தாளோ அவள் அக அழகு அவனைக் கவர்ந்தது. ஆகவே அவளை மணம்புரிய முன் வந்தான்'' என்றாள்.

விக்கிரமனது பதிலினால் அவன் மௌனம் கலையவே, அவன் சுமந்து வந்த உடலோடு வேதாளம் மீண்டும் முருங்க மரத்தில் ஏறிக் கொண்டது.






# திருவரங்கத்தில் எந்நாளும் திருநாள்



**த**மிழகத்தில் திருச்சியிலிருந்து 5 கி.மீ தொலைவில் உள்ள திருவரங்கம் என்னும் ஸ்ரீரங்கத்தில் மகாவிஷ்ணு திரு ரங்கநாதசுவாமி என்ற திரு நாமத்துடன் அரிதுயில் கொண்டுள்ளார். இந்தியாவிலேயே மிகப் பெரிய வைணவத் தலமான ஸ்ரீரங்கத்தின் ராஜகோபுரமும் 13 அடுக்குகளுடன் 235 அடி உயரத்திற்கு இந்தியாவிலேயே உயர்ந்த கோபுரமாக விளங்குகிறது. காவிரி, கொள்ளிடம் ஆகிய இரு நதிகளாலும் சூழப்பட்ட ஸ்ரீரங்கத்தில் ஆண்டுகளுக்கு சுமார் 300 நாட்கள் திருநாட்களாகக் கொண்டாடப் படுகின்றன. ஸ்ரீரங்கத்து கோயில் திருவிழாக்களில் வைகுண்ட ஏகாதசி மிகச் சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. ரங்கநாத சுவாமியையும், ரங்க நாயகியையும் தவிர, இராமர், கிருஷ்ணர், அனுமார், பன்னிரெண்டு ஆழ்வார்கள், ராமானுஜர் ஆகிய அனைவர்களுக்கும் தனித்தனி சன்னிதிகள் உள்ளன.

# இந்தியாவின் மக்கள் தொகை

**தி**ல்லியில் 2000ம் ஆண்டு மே மாதம் 11ந் தேதி ஒரு மருத்துவமனையில் பிறந்த பெண் குழந்தையான ஆஸ்தாவுக்கு ஒரு தனிச் சிறப்பு ஏற்பட்டது. அவள் பிறந்தவுடன், இந்தியாவின் மக்கள் தொகை சரியாக 100 கோடி ஆனது. 20ம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இந்தியாவின் மக்கள் தொகை 23 கோடி மட்டுமே இருந்தது.

கடந்த நூற்றாண்டின் முடிவில் உலக மக்கள் தொகை சுமார் 600 கோடி இருந்தது. கி.பி.2045ம் ஆண்டுக்குள் இந்தியா உலகிலேயே மிக அதிக மக்கள் தொகையுள்ள நாடாக மாறிவிடும் என்று எதிர்பார்க்கப் படுகிறது.





# பிசாசின் உதவி

லட்சுமிபுரத்தில் அன்னபூரணி என்ற பெண்மணி ஒரு உணவு விடுதியை நடத்தி வந்தாள். ஒருநாள் தனது வேலைகளை முடிக்கவே அவளுக்கு இரவில் அதிக நேரம் ஆகிவிட்டது. அந்த சமயம் பார்த்து ஒரு கிழவர் வந்து சேர்ந்தார். ''இவ்வளவு கால தாமதமாகவா உண்ண வருவது?'' என்று கோபத்துடன் கேட்ட அன்ன பூரணியைப் பார்த்து, அந்தக் கிழவர் ''எனக்கு பசியோ, தாகமோ ஏற்படுவதே இல்லை. எனக்கு இன்றிரவு தங்க இடம் கொடுத்தால் போதும்'' என்றார்.

''பசி, தாகமற்ற யோகியா நீங்கள்?'' என்று ஆச்சரியத்துடன் அவள் கேட்க, அந்தக் கிழவர், ''ஒரு விதத்தில் அப்படித்தான். நான் இந்த கிராமத்தைச் சேர்ந்தவன் தான். என் பெயர் ராமன். உன்னுடைய அம்மா இந்த உணவு விடுதியை நடத்தி வந்த காலத்தில் சிறுமியாய் இருந்த உன்னை எனக்கு நன்றாகத் தெரியும். இங்கு நடந்த ஒரு தீ விபத்தில் என் குடும்பத்தினர் அனைவரும் இறந்து விட்டனர். நான் இந்த கிராமத்தை விட்டு வெளியேறி, பல தலங் களையும் சுற்றிக் கொண்டு இருந்தேன். ஒரு யோகியின் தயவால் எனக்கு எதிர்காலத்தை அறியும் சக்தியும் பிறருடைய குறைகளைத் தீர்க்கும் சக்தியும் ஐம்புலன்களையும் அடக்கும் சக்தியும் கிடைக்கப் பெற்றன. எனவே என்னை பசி, தாகம் வருத்துவதில்லை. யாராவது விரும்பினால் அவர்களுக்கு என் சக்திகளை அளிக்க முடியும்'' என்றார்.

அவர் சொன்னதைக் கேட்டு வியப்புடன் ''அப்படியா?'' என்று அன்னபூரணி கேட்க, அவர் தொடர்ந்து ''ஆன்னபூரணி உனது பெயருக்கு ஏற்றார்போல் நீ உண்மையாகவே அன்னபூரணி. நீ வாங்கிக் கொள்ளும் பணத்திற்கு நேர்மையாகவும் அதே சமயம்

-ராம சர்மா-



பசியோடு வருபவர்களின் பசி தீர்க்கும் சிறப்பான பணியினை நீ முறையாக செய்து வருவதாலும் கடவுள் உன் மீது மகிழ்ச்சியாக உள்ளார். நாளை காலை நீ நமது கிராமத்துக் குளக்கரையில் எனக்காகக் காத்திரு. என்னுடைய அபூர்வசக்தி களை உனக்கு அளித்து விட்டு, நான் காசிக்குச் சென்று முக்தி அடை வேன்,'' என்றார்.

மறுநாள் காலை இருவரும் குளக் கரையை அடைந்தனர். குளத்தில் நீராடிய பிறகு, ராமன் தனது அபூர்வ சக்திகளை அன்னபூரணிக்கு மாற்றித் தந்து விட்டார். பிறகு அவர், ''அன்னபூரணி இந்த சக்திகளை உன் சுயநலத்திற்காக நீ பயன்படுத்தக் கூடாது. அப்படிச் செய்தால் நீ பைத்தியம் பிடித்து அலைவாய்'' என்றார். இதைச் சற்றும் எதிர்பாராத அன்னபூரணி திகைத்துப் போனாள். இந்த சக்திகளின் மூலம் தனக்கு வருமானமோ, வேறு ஏதாவது வசதி களோ தேடக்கூடாது என்ற நிபந்தனை யினால் இவற்றினால் தனக்கு எதுவும் லாபம் இல்லை என ஏமாற்றம் அடைந்தாள்.

அன்னபூரணிக்கு ஒரு தத்துப் பிள்ளை இருந்தான். அவன் பெயர் கோவிந்தன். அவள் உற்சாகம் இழந்து காணப்படுவதின் காரணத்தை கோவிந்தன் அறிந்து கொண்டான். அம்மாவின் கவலையை எவ்வாறு போக்குவது என்ற யோசனையில் ஆழ்ந்த கோவிந்தன், ஒருநாள் குளக் கரையில் உள்ள ஓர் ஆலமரத்தின் அடியில் நின்று இதைப்பற்றி சிந்தித்துக் கொண்டிருந்தான். அப்போது திடீரென அந்த ஆலமரத்தி லிருந்து ஒரு பிசாசு குதித்தது. நேருக்கு நேர் ஒரு பிசாசைக் கண்டதும் கோவிந்தன் வெலவெலத்துப் போனான்.

அவன் பயந்ததைக் கண்ட பிசாசு, ''பயப்படாதே நான் உனக்கு நன்மை செய்ய வந்துள்ளேன். எந்த ராமன் உன் தாய்க்கு அபூர்வசக்திகளை அளித் திருக்கிறாரோ, அவனின் தந்தை நான். தீ விபத்தில அகால மரணம் அடைந்த தால், பிசாசாக மாறி இந்த ஆல மரத்தில் வசிக்கிறேன். நீ அன்னபூரணியின் தத்துப் பையன் தானே அதனால் அவள் தன் ஞான திருஷ்டியால் உன்னைப் பற்றி அறிந்து கொண்டு உன் எதிர்

காலத்தைப் பற்றிக் கூற முடியாது. அப்படியே கூறினாலும் அது சுயநல மாகத்தான் கருதப்படும். ஆனால் இந்த விஷயத்தில் உங்களுக்கு என்னால் உதவி செய்ய முடியும்'' என்றது.

பிசாசின் இந்த வார்த்தைகளைக் கேட்டதும் கோவிந்தனுக்கு நிம்மதி வந்தது. இருப்பினும் அவன், என் தாய்க்கு நிகரான என் அன்னை அன்னபூரணியின் சக்திகள் எனக்கு ''எவ்வாறு ஒத்துப்போகும்?'' என்று கேட்டான். அதற்கு நான் இறந்து விட்டதால் இதைப்பற்றி என்னால் பேச இயலாது. நீதான் என்னுடைய எதிர்காலத்தைப் பற்றிப் பேச வேண்டும். அதைப் பற்றித் தெரிந்து கொண்டபின் தான் என்னால் உனக்கு உதவ முடியும்.'' என்றது பிசாசு வடிவில் இருக்கும் ராமனின் அப்பா. கோவிந்தன் தன் அன்னை அன்னபூரணியிடம் அனைத்து விஷயத்தையும் கூறி விட்டான்.

அன்னபூரணியும் தன் சக்தியை பரிசோதிக்க தக்க சமயம் வந்து விட்டது என்று மகிழ்ந்தாள். ஆனால் தன் ஞானக் கண்ணால் பிசாசின் எதிர்காலத்தைப் பார்த்த அவள் பிசாசு அவளின் சக்தியைக் கொண்டு முக்தியடைந்து விடும் என்பதை அறிந்து பயந்து விட்டாள். இருப்பி னும் அவ்வாறு செய்வது சுயநலமாக இருக்குமோ என்ற சந்தேகமும் இருந்தது. தன்னுடைய சந்தேகத்தை தீர்த்துக் கொள்ள கோவிந்தனுடன் ஆலமரத்தின் அருகில் சென்றாள். பிசாசு மரத்திலிருந்து கீழ் இறங்கி வந்து, அன்னபூரணியை வணங்கி



விட்டு, ''அம்மா அன்னபூரணி, தீ விபத்தில் இறந்த என் மகள் கிரிஜா இப்போது மறு பிறவி எடுத்து என்னுடைய தம்பி சிவராஜனுக்கு பேத்தியாக வளர்ந்து வருகிறாள். ஆனால் அவள் ஊமை. உன்னுடைய வளர்ப்பு மகன் கோவிந்தன் அவளைத் திருமணம் புரிய வேண்டும் என்பது என் விருப்பம். நீ சிவராஜனிடம் சென்று அவன் பேத்தியிடம் உன் அரிய சக்திகளைப் பயன்படுத்தி அவளை மீண்டும் வாய் திறந்து பேசச் செய். நான் உன்னிடம் கூறிய விஷயங்களை என் தம்பியிடம் சொல்லி, அந்தப் பெண்ணை உன் மருமகளாக ஏற்றுக் கொள். செல்வந்தனான என் தம்பி திருமணத்தில் சீர் வரிசைகள் மிகச் சிறப்பாகச் செய்வான். அதன் மூலம் உன் குடும்பம் மேன்மை பெறும்'' என்றது.

பிசாசின் வார்த்தைகளைக் கேட்டு மகிழ்ந்த அன்னபூரணி கோவிந்தனையும் அழைத்துக் கொண்டு பக்கத்து கிராமத்தில் இருந்த சிவராஜனை அடைந்தாள். சிவராஜனின் பேத்தியைத் தன் சக்தியால் குணப் படுத்தினாள். இதைக் கண்டு மகிழ்ந்த சிவராஜனும் தன் பேத்தியை கோவிந்தனுக்கு மணமுடித்து சீர் வகைகளை சிறப்பாகச் செய்தான்.

அன்னபூரணியைப் பற்றி சுற்று வட்டார கிராமங்களில் வசிப்பவர்களுக்குத் தெரிந்து விட்டது. தங்கள் குறைகளைத் தீர்க்க வேண்டியும் எதிர் காலத்தை அறிய விரும்பியும் பல தரப்பினரும் அன்னபூரணியை நோக்கி வரத் தொடங்கினர். தன்னை நாடி வந்தவர்களுக்கெல்லாம் அன்னபூரணியும் தன்னால் இயன்ற உதவிகளை செய்தாள். ஆனால் அவர்களிடமிருந்து கிடைத்த பணத்தை தனக்காகப் பயன்படுத்திக் கொள்ளவில்லை. அந்தப் பணத்தை பொது மக்களுக்குப் பயன்படக் கூடிய வகையில் மருத்துவ விடுதிகளும் பள்ளிக் கூடங்களும் கட்டுவதற்குப் பயன்படுத்தினாள்.

மக்களிடையே அவள் பெயரும், புகழும், செல்வாக்கும் பெருகின.



# செய்திச்சுடர்



## புகழ் பெற்ற தபால் தலைகள்

**த**பால் இலாகாவினர் 2002ம் ஆண்டு வெளியிடப் பட்ட தபால் தலைகளில் பிரபலமானவை எவை என்று கண்டறிய ஓர் நாடு தழுவிய ஆராய்ச்சி நடத்தினர். அதன்படி ரிலையன்ஸ் நிறுவனத்தைச் சேர்ந்த திருபாய் அம்பானியின் தபால் தலை மிக பிரபலமாக இருந்து முதல் இடத்தைப் பிடித்ததாகவும், கேரள மாநிலத்து நாட்டியக் கலையான கதக்களியைப் பற்றிய தபால் தலை இரண்டாம் இடத்தைப் பிடித்ததாகவும், எவரெஸ்டில் இந்திய ராணுவத்தின் வெற்றியைக் குறித்து வெளியிட்ட தபால் தலை மூன்றாவது இடத்தைப் பிடித்ததாகவும் தெரிகிறது.

## வயது ஒரு தடையல்ல

**கெ**ன்யா நாட்டில் எல்டோரே என்னும் ஊரில் உள்ள கிமானி எங்காங்கா மாருகே படிப்பது உள்ளூர் பள்ளியில் முதல் வகுப்பில். இது சாதாரண விஷயம் என்கிறீர்களா? அவரின் வயது 84. நடக்கவே தள்ளாடும் அவர், ஒரு ஊன்று கோலின் உதவியுடன் தான் பள்ளிக்குச் செல்கிறார். கிமானி ஒரு பழம் பெரும் விடுதலைப் போராட்ட வீரர். சிறு வயதில் படித்ததில்லை. தனது முதிய பருவத்தில் அரசாங்கம் அவருக்கு தரும் உதவித் தொகையை சரியாக எண்ணக் கூடத் தெரியாமல் அவர் தவித்தார். தொடக்கக் கல்வி இலவசமாக அளிக்கப் பட்டு வந்ததால், தனது தள்ளாத வயதைப் பொருட்படுத்தாது ஆரம்பக் கல்வியைக் கற்கத் தொடங் கினார். அவருடைய பேரப் பிள்ளைகள் அதே பள்ளியில் அவரை விட மேல் வகுப்பில் பயின்று வருகின்றனர் என்பது சுவாரஸ்யமான விஷயம்.



## அஸ்ஸாம் நாட்டுப்புறக் கதை

# அசுரனைத் துரத்திய அதிமேதாவிகள்

ஒரு கிராமத்தில் இரண்டு நண்பர்கள் இருந்தனர். அவர்களுள் மோயித்திரா என்பவன் பிறவியிலிருந்தே குருடன். மற்றவனான புக்கான் பிறவியில் இருந்து நொண்டி. அவர்கள் அடிக்கடி கிராமத்து ஆலமரத்தின் அடியில் அமர்ந்து கதை பேசுவதுண்டு.

ஒரு சமயம் அந்த கிராமத்தில் பிஹூ பண்டிகை கொண்டாடப் பட்டது. கிராமம் கொண்டாட்ட நிகழ்ச்சிகளில் அமர்க்களப் பட்டது. ஆனால் நண்பர்கள் புக்காலும் மோயித்திராவும் அந்த நிகழ்ச்சிகளை ரசிக்க முடியாமல் கஷ்டப்பட்டனர்.



அப்போது அவர்கள் நிகழ்ச்சிகளை ரசிக்க ஒரு திட்டம் தீட்டினர். அதன்படி குருடனான மோயித்திரா தன் தோளில் நொண்டியான புக்கானைத் தூக்கிக் கொண்டு கொண்டாட்ட நிகழ்ச்சிகள் நடக்கும் இடத்திற்குச் சென்றான். தான் கண்ணால் காண்பதையெல்லாம் புக்கான் மோயித்திராவுக்கு எடுத்து ரைக்க இவ்வாறு அவர்களாலும் நிகழ்ச்சிகளை ரசிக்க முடிந்தது.

பண்டிகை முடிந்த பிறகும் கூட, அவர்கள் இந்த வழக்கத்தைத் தொடர்ந்தனர். இதனால் தங்க ளுடைய உடல் குறைபாடுகளை ஓரளவு மறந்து விட்டனர் என்றே சொல்லலாம. ஒருநாள் இருவரும் பேசிக் கொண்டிருக்கையில் மோயித்திரா புக்கானை நோக்கி, ''நாம் எவ்வளவு நாட்கள்தான் இவ்வாறு வீணே காலத்தை கழிப்பது? நாம் இந்த கிராமத்தை விட்டு எங்காவது போய் வேலை செய்து பிழைத்துக் கொள்வோம்'' என்றான். ''மோயித்திரா இந்த கிராமத்திற்குள் சுற்றி வருவது சுலபம். ஆனால் இங்கிருந்து பக்கத்து நகரத்திற்கெல்லாம் என்னைத் தூக்கிக் கொண்டு செல்ல உன்னால் முடியுமா?'' என்று புக்கான்

கேட்டான் அதற்கு மோயித்திரா,'' பரவாயில்லை நடக்க முடியும் வரை உன்னை சுமப்பேன். நடுநடுவில் ஓய்வு எடுத்துக் கொள்வேன். ஆகவே நாம் நகரத்திற்குச் செல்வோம் வா'' என்று கூறினான்.

இவ்வாறு தீர்மானித்தபின், மறு நாள் இருவரும் கோயிலுக்குச் சென்று இறைவனை வணங்கிவிட்டு கிராமத்தை விட்டுக் கிளம்பினர். மோயித்திரா புக்கானைத் தோளில் சுமந்து கொள்ள புக்கான் செல்லும் வழியில் தான் காணும் காட்சிகளை எல்லாம் தன் நண்பனுக்கு விவரித்துக் கொண்டே சென்றான். அவ்வாறு செல்லுகையில் வழியில் ஓரிடத்தில் சாலை யோரம் ஒரு மத்தளம் தென் பட்டது. அதைப்பார்த்த புக்கான், அதை எடுத்துத் தன்னுடன் வைத்துக் கொண்டான்.

வழியில் ஒரு கிணற்றில் நீர் எடுத்துப் பருகி இருவரும் இளைப் பாறினார்கள். அங்கு கிணற்றடியில் ஒரு கயிறு தென்பட்டது. இதுவும் நமக்குப் பயன்படும் என்று கருதிய நண்பர்கள் அதையும் எடுத்துக் கொண்டனர். கொஞ்சதூரம் சென்ற வுடன் ஒரு குளம் தென்பட்டது. குளக்கரையில் அமர்ந்து இருவரும் சற்று ஓய்வு எடுத்துக் கொண்டிருந்த போது அவர்களை நோக்கி ஓர் ஆமை ஊர்ந்து வந்து கொண்டிருந்தது. அதைப் பார்த்த புக்கான் ''நண்பா, ஓர் ஆமை நம்மை நோக்கி வருகிறது. அதையும் எடுத்துக் கொள்வோமா?'' என்று கேட்டுவிட்டு, அந்த ஆமையையும் அவன் எடுத்துக் கொண்டான்.

இப்படி நாள் முழுதும் சென்று கொண்டிருந்த நண்பர்கள் இறுதியில் மாலை நேரம் வந்ததும், இரவு தங்குவதற்குத் தகுந்த இடத்தைத் தேடினார்கள். மோயித்திராவின் தோளில் அமர்ந்திருந்த புக்கான்



கண்களில் ஒரு வீடு சற்றுத் தொலைவில் தென்பட்டது. இரவு அங்கு தங்கி விடலாம் என எண்ணி, இருவரும் அந்த வீட்டுக்குச் சென்றனர்.

அந்த வீட்டுக்குள் நுழைந்த நண்பர்களுக்கு ஒரு பேரதிர்ச்சி காத்திருந்தது. அந்த வீட்டிலிருந்த ஓர் அறையில் கோரமான உருவத்துடன் ஓர் அசுரன் படுத்து உறங்கிக் கொண்டிருந்தான். அவனைக் கண்டு நடுங்கிய இருவரும் சுற்றுமுற்றும்



வேறு ஏதாவது வீடு தென்படுகிறதா என்று பார்த்தனர். எங்கும் எதுவும் தென்படாததால், அந்த அசுரன் உள்ள வீட்டில் தங்குவதைத் தவிர வேறு வழி இல்லாமல் போயிற்று. முன்னெச்சரிக்கையாக அசுரன் படுத்துறங்கிய அறையின் கதவை வெளிப்புறம் தாழிட்டு விட்டு, நண்பர்கள் மற்றோர் அறையின் உள்ளே சென்று அதை உட்புறம் தாழிட்டுக் கொண்டனர். அந்த அறையில் ஏராளமான உணவுப் பண்டங்களைக் கண்ட நண்பர்கள் இருவரும் மகிழ்ச்சியுடள் வயிறார அவற்றை உண்டனர். அசுரன் விழித் தெழுந்தால் என்ன செய்வது என்பதைப் பற்றி ஒரு திட்டமும் தயார் செய்தனர்.

அவர்கள் கொண்டு வந்திருந்த மத்தளம் தற்செயலாகத் தரையில் உருண்டு விழ, அந்த சத்தத்தில் அசுரன் விழித்துக் கொண்டான். தான் வெளியில் செல்ல முடியாமல் தன் அறைக்கதவு வெளியில் தாளிடப் பட்டுள்ளதை அறிந்தவுடன், அசுரன் கொதித்தெழுந்தான். ''யாரடா என் அறைக் கதவை தாளிட்டது? கதவைத் திற'' என்று பெரிய குரலில் கத்தினான்.

நண்பர்கள் முன்னமே திட்டமிட்ட படி மத்தளத்தை பலமாகக் கொட்டி னார்கள். அந்த ஒலியைக் கேட்டுத் துணுக்குற்ற அசுரன் ''யார் நீ?'' என்று கத்தினான். உடனே மோயித்திரா கட்டைக் குரலில் ''நீ யாரென்று முதலில் சொல்'' என்று உரக்கக் கத்தினான். ''நான் அசுரன். ஆமாம் நீ யார்?'' என்று அசுரன் கேட்க. ''நான் அசுரர்களின் தலைவன்'' என்று மோயித்திரா பதிலுக்குக் கத்தினான். அதைக் கேட்டு திடுக்கிட்ட அசுரன் ''இல்லை, நீ பொய் சொல்கிறாய். வெளியில் வா'' என்றான்.

''நீ தான் பொய் சொல்கிறாய். நீ அசுரன் என்பதற்கு என்ன அத்தாட்சி?'' என்று மோயித்திரா பயப்படாமல் கேட்க, அசுரன் தன் தலைமுடி ஒன்றைப் பிய்த்து ஜன்னல் வழியே வீசினான். ''பார் என் முடியை எவ்வளவு பருமனாக இருக்கிறது என்று! இப்போது சொல்'' என்றான் அசுரன்.

உடனே மோயித்திரா தாங்கள் கொண்டு வந்த கயிற்றை அசுரன் பக்கம் வீசி எறிந்து ''என்னுடைய முடியைப் பார்'' என்று சவால் விட்டான். அதைக் கயிறு என்று

அறியாத அசுரன் உண்மையாகவே பயந்து போனான். இருந்தாலும் சமாளித்துக் கொண்டு, தன் தலை முடியிலிருந்து ஒரு பேனை எடுத்துத் தூக்கி எறிந்தான். ''தவளை அளவு பெரிதான என் தலைப் பேனைப் பார்'' என்று அசுரன் வால் விட்டான். ''ஹாஹ்ஹா'' என்று சிரித்த மோயித்திரா'' இதுதான் உன் பேனா! என்னுடைய தலையிலுள்ள பேனைப்பார்'' என்று ஆமையைத் தூக்கி அசுரனிடம் எறிந்தான். ஆமையைப் பார்த்த அசுரன் கதி கலங்கி விட்டான். உண்மையிலேயே வெளியில் உள்ளவன் பெரிய அசுரன் என்ற தப்புக் கணக்குப் போட்ட அசுரன் ''ஐயா, நீங்கள் பெரிய அசுரன் என்று ஒப்புக் கொள்கிறேன். கதவைத் திறவுங்கள். நாம் இருவரும் நண்பர்கள் ஆகலாம்'' என்று சமாதானமாகப் பேசினான்.

''தாராளமாகக் கதவைத் திறக்கி றேன். வெளியில் வா. எனக்கு ஒரே பசி. நீ வெளியில் வந்ததும் உன்னை கடித்துக் குதறித் தின்னப் போகிறேன்'' என்று மோயித்திரா சொன்னதும் அசுரன் பெருத்த அதிர்ச்சி அடைந் தான். மோயித்திரா புக்கானின் உதவியுடன் சத்தமின்றி அசுரன் அறைக்கதவுத்தாழ்ப்பாளைநீக்கி விட, இருவரும் ஒளிந்து கொண் டனர். இதற்குள் அசுரன் தன் அறைக் கதவை இலேசாகத் திறக்க முயற்சி செய்ய கதவு உடனே திறந்து கொண்டது. மெதுவாக வெளியில் எட்டிப் பார்த்த அசுரன் கண்களில் யாரும் தென் படாததால் தப்பித்தேன் பிழைத்தேன் என்று அந்த வீட்டை விட்டு ஒரே ஓட்டம் பிடித்து விட்டான்.

பிறகு இரு நண்பர்களும் தைரிய மாக வெளியே வந்து, அசுரனுடைய உடமைகளை ஆராய்ச்சி செய்தனர். அவனிடம் இருந்த ஏராளமான பணம், காசு ஆகியவற்றை எடுத்துக் கொண்டனர். அசுரன் வைத்திருந்த தைலங்களில் ஒன்றை தன் கண்களில் தடவ, மோயித்திராவுக்குக் கண் பார்வை திரும்பி விட்டது. மற்றொரு தைலத்தைத் தன் கால்களில் தடவ, புக்கானுக்குக் கால்கள் சரியாகி விட்டன. இருவரும் அசுரனிடம் இருந்த பணம், காசு, உணவுப் பொருட்கள், தைலங்கள் அனைத் தையும் எடுத்துக் கொண்டு தங்கள் கிராமத்திற்கேத் திரும்பி விட்டனர். அதன்பிறகுதாங்கள் கொண்டு வந்தப் பணத்தைக் கொண்டு சுக வாழ்வு வாழத் தொடங்கினர்.






# வாசகர்களுக்கானக் கதைப் போட்டி

## சிறந்த படைப்பிற்குப் பரிசு ரூ250.




**கீழ்காணும் கதையைப் படியுங்கள்:**

முதுமலைக் காட்டின் விலங்குகளை மனிதர்கள் வேட்டையாடியதன் விளைவாக, அதன் எண்ணிக்கை குறைய ஆரம்பித்தது. இதைத் தடுப்பதற்காக அனுமதி பெற்றவர்கள் மட்டுமே காட்டுக்குள் நுழைய வேண்டும் என்று அரசாங்கம் ஆணைப் பிறப்பித்தது.

ஒருநாள் விஜயனும் மனோகரனும் வேட்டையாடும் ஆசையில் இரகசியமாகக் காட்டுக்குள் நுழைந்தனர். இருவரும் வனத்துறை அதிகாரிகளிடம் பிடிபட்டனர். அவர்களைக் கண்ட விஜயன் வேகமாக ஓட ஆரம்பித்தான். வெகுதூரம் ஓடிய பிறகு, விஜயனை அவர்கள் பிடித்து விட்டனர். அவன் தான் வைத்திருந்த அரசாங்க அனுமதிச் சீட்டினை அவர்களுக்குக் காட்டினான். அதைக்கண்டு ஆச்சரியமுற்ற அதிகாரிகள் ''உன்னிடம் அனுமதிச் சீட்டு இருந்தபோதும், நீ எதற்காக எங்களைக் கண்டு ஓடினாய்'' என்று கேட்டனர். நீங்களே சொல்லுங்கள்

- ♦ விஜயன் ஏன் ஓடினான்?
- ♦ அவன் என்ன பதில் அளித்திருப்பான்?
- ♦ அவன் பதிலைக் கேட்டு அதிகாரிகள் என்ன செய்திருப்பார்கள்?

உங்கள் விளக்கத்தை 100-150 சொற்களில் எழுதி ஒரு உறைக்குள் வைத்து உறைமீது கதைப் போட்டி, ஜூலை மாதம் என எழுதி கீழே கொடுக்கப்பட்டுள்ள கூப்பனையும் சேர்த்து அனுப்ப வேண்டும்.

## முடிவு தேதி : ஆகஸ்ட் 31, 2004

**பெயர் ------------------------------------வயது------------பிறந்த தேதி----------------**

**பள்ளியின் பெயர் ---------------------------------------------------------------------**

**வகுப்பு----------------------------வீட்டு முகவரி-----------------------------------**

**-----------------------------------------------------------------------------------------**

**-------------------------------------------------------------பின்கோடு-------------------**

**பெற்றோர் கையொப்பம்                    கலந்து கொள்வோரின் கையொப்பம்**

## சந்தமாமா இந்தியா லிமிடெட்

**82, டிஃபன்ஸ் ஆஃபீசர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல் சென்னை-600 097.**

# SURYARAJ



இந்திய ராணுவத்தின் 4வது ரெஜிமெண்ட் அந்த நாளில்தான் தன் கடைசி யுத்தத்தை நடத்தியது.
இமயமலைத் தொடரின் உச்சியில் எதிரிகளின் படையைக் கிழித்துக் கொண்டு போராடியது.
மேஜர் சூர்யராஜ் மட்டுமே இந்தப் போரில் உயிர் பிழைக்கிறான்.
அதுவும் தனியாக,
படுகாயமடைந்து,
களைத்துப் போய்
அந்தக் கடும் குளிரில் தவிக்கிறான்.




அவனிடம் அவசர நிலைமைக்கான ஆகாரமான பார்லே-ஜீயும், வாழ வேண்டுமென்ற மன உறுதியும்தான் இருந்தது.
இப்போது அவன் கொடுமையின் வடிவமான
ஒரு புதிய எதிரியுடன் போராடுகிறான்.




இரண்டு வாரங்களுக்குப் பின்.
சூர்யராஜ் ஆகாரம் ஒன்றுமில்லாமல் தவிக்கிறான்.
மனோபலமும் குறைந்து வருகிறது.
இந்த மலையில் உயிரிழக்க வேண்டியதுதானா?
அச்சமயத்தில் சுற்றிக் கொண்டிருக்கும் ஒரு கோள் அவனை எதிர்பாராதவிதமாகச் சந்திக்கிறது.
ஒரு திடப்பொருளை ஒருவரும் உபயோகிக்காமல் விட்டுச் சென்ற விண்வெளிக் கப்பலாக பார்க்கிறது.




பூமியின் வெளிப்புற பாதுகாவலர்களால் விரும்பப்பட்ட சூப்பர் மனிதன் இவன் தான். பேராசை, வெறுப்பு, தீமை மற்றும் பிடிவாதம் போன்றவை அன்னை பூமியை பாதிப்பதை எதிர்த்துப் போராடக் கூடிய ஒரே சக்தி.

### ஆர்ப்

இறுதியில், பல வருடங்களுக்கான ஒரு தேடல் இப்போது முடிவடைகிறது. ஒரு புதிய எண்ணம் தன் இடத்தை எடுத்துக் கொள்கிறது. தீய சக்திகளுக்கு எதிராகப் போராடும் ஜீ-மேனுக்கு உதவ, வழிகாட்ட மற்றும் ஆதரவு அளிக்க.


கதிர்களின் மூன்று
நிலைகள் உள்ளன :
நீலக் கதிர் - உறுதியானது
மஞ்சள் கதிர் - கடுமையானது
சிவப்பு கதிர் - தீவிரமானது


ஜீ-பேஸ்ட் உலகம் முழுதும் நடக்கும் குற்றங்களைப் பற்றி ஜீ-மேனுக்கு எச்சரிக்கை செய்கிறது.
இப்புகைத்திற்கு அப்பால் பார்வையை செலுத்தக் கூடிய கண்கள் கொண்ட ஆர்ப் மற்றும்
பூமியை சுற்றும் பற்ற கோள்கள் மூலமாக தகவல்கள் கிடைத்த வண்ணம் இருக்கின்றன.


தன்னுடைய ட்ரெய்லருடன் சூர்யராஜ்
எப்போதும் தொடர்பு வைத்துள்ளான்.
இந்த ட்ரெய்லர் மறுவேடத்தில் இருக்கும்
ஒரு ஸ்பேஸ்க்ராஃப்ட் ஆகும். இந்த
வாகனம் சிக்னல்களை பெற்றுக் கொள்கிறது
மற்றும் அனுப்புகிறது.


Parle G
எப்பொழுதும் ஸ்டாமினாவை கொண்ட பார்லே-ஜீ
பிஸ்கட்டிலிருந்து ஜீ-மேன் தன் சக்தியைப் பெறுகிறான்.
குற்றங்களை எதிர்த்துப் போராடாத வேளைகளில்
ஜீ-மேன் மேஜர் சூர்யராஜாக வாழ்கிறான் -
ஒரு ஸ்கூலில் தேகப்பயிற்சி இன்ஸ்ட்ரக்டராக
வேலை செய்கிறான். அவனுடைய
மாணவர்கள் அவனை நேசிப்பதோடு அவன்மீது
மரியாதையையும் வைத்துள்ளனர்.

இதுவரையிலான கதை... டெர்ரோவின் பஸ்ஸில் சென்று கொண்டிருந்த ஸ்கூல் குழந்தைகளைக் கடத்திச் செல்கிறான். அவர்களை ஒரு கொடிய மெஷினில் போட்டு அவர்களின் சக்தியை உறிஞ்சி தன் உடலில் மாற்றத் திட்டமிடுகிறான். இதன் மூலம் டெர்ரோவின் தான் என்றும் இளமையாக இருக்க நினைக்கிறான். ஜீ-மேன் குங்பத் தீவில் உள்ள இரகசிய இடத்தில் வந்து சேருகிறான். ஆனால் அவன் டெர்ரோவினின் பெரிய சைனியத்தை முதலில் தோற்கடிக்க வேண்டும். டெர்ரோவினுக்கு இதில் மகிழ்ச்சி இல்லை... மேற்கொண்டு படியுங்கள்.

பிறகு ஆயிரம் ராணுவ வீரர்கள் சூழ்ந்து கொள்ளும் நிலை.




ஜீ-மேன் ஒரு கொழுந்து விட்டு எரியும் தீப்பந்தமாக மாறுகிறான்.



பட்டாளம் முழுவதையும் பிளந்து கொண்டு செல்கிறான்.

பிரம்மாண்டமான ஒளியின் காரணமாக மனிதன் மற்றும் மெஷின் இரண்டும் செயலற்றுப் போகின்றன.



தீவு முழுதும் சடலங்கள் இறைந்துள்ள காட்சி.

மற்றொரு இடத்தில் ...

டெர்ரோலினுக்கு கோபம் பொத்துக் கொண்டு வருகிறது.
உரக்க சத்தம் போடுகிறான்

தன் படை சின்னாபின்னமாகி இருப்பதை
டெர்ரோலின் பார்க்கிறான்.

என்ன சக்தி இருக்கறவங்க எல்லாம்
உதவாக்கரை படையாளுங்க.
பிளான் 'பி' அமுல்
படுத்தும் நேரம் வந்திருக்கு.

தன்
சிம்மாசனத்திலுள்ள
ஒரு பட்டனை
டெர்ரோலின்
அழுத்துகிறான்.

கீழிருந்து இறக்கைகள் வெளிப்படுகின்றன.
ஒரு கண்ணாடி மூடி அவனை மூடிவிடுகிறது.
அவனுடைய சிம்மாசனம் பறக்க ஆரம்பிக்கிறது.



ஜீ-மேன், என் விஷயத்துல உன்னால தலையிடாம இருக்க முடியாதா ?




மன்னிக்கணும் டெர்ரோவின் ! பிரச்னைகள் இருக்கற இடத்தில தலையிட எனக்கு ரொம்ப பிடிக்கும்.

தன் சக்தி கதிர்களின் உதவியால் தீ-மேன் குழந்தைகளை கசன்டோட்ராவிலிருந்து விடுவிக்கிறான்.
ஒரு நிமிஷம் தாமதித்திருந்தாலும், குழந்தைகளின் உயிருக்கு ஆபத்து ஏற்பட்டிருக்கலாம்.













அடுத்த நாள்
மற்றொரு விளையாட்டில் வெற்றி பெறும் தருவாயில்...


ஒரு கை மேஜர் சூர்யராஜின் தோளைத் தட்டுகிறது.


அவனுடைய சகஊழியர் தான் அது.
பிக்னிக் பஸ்ஸில் இருந்த
டீச்சர்தான் அவள்.
நெஜமா, நீங்க நேத்திக்கு அங்கே இருந்திருக்கணும் !


இனி வரப்போகும் இதழ்களில் அதிகப்படியான ஜீ-மேன் சாகஸங்களை எதிர்பாருங்கள்.



# கல்வி அதிகாரி

முன்னொரு காலத்தில் காஞ்சன்புரி என்ற ராஜ்ஜியத்தை சந்திரசேனன் என்ற மன்னன் ஆண்டு வந்தான். அவனது தந்தையின் அகால மரணத்தினால், மிக இளம் வயதிலேயே சந்திரசேனனுக்கு நாட்டின் பொறுப்பை ஏற்றுக் கொண்டு மன்னனாக ஆட்சி புரிய வேண்டி இருந்தது. ஆனால் அவனது இளம் வயதும், அனுபவக் குறைவும் ராஜ்ஜியத்தை முறையாக ஆள்வதற்குத் தடையாக இல்லை. மிகவும் புத்திசாலியான சந்திரசேனன் நாட்டைத் திறம்பட ஆண்டு வந்தான். தவிர ராஜ்ஜியத்தின் நன்மைக்காகச் சில சிறப்பான மாறுதல்களையும் தன் ஆட்சியில் ஏற்படுத்தினான். கல்வியறிவில் சிறந்து விளங்கிய சந்திரசேனன் தன் ராஜ்ஜியத்தின் கல்வித் துறையிலும் பயன்தரக்கூடிய மாறுதல்களை ஏற்படுத்த எண்ணமிட்டான். இதற்காக தன் சபையிலிருந்த மூதறிஞர்களை ஒன்றுகூட்டி பல நாட்கள் ஆலோசனை செய்தான். அதன் விளைவாக நாடெங்கும் ஒரே மாதிரியான கல்வித் திட்டத்தை அமலாக்குவது என்று முடிவு செய்யப்பட்டது. மாணவர்களுக்குப் பயன்தரும் கலைகளைக் கற்பிக்கவும் மாணவர்களுக்கு எந்தத் துறையில் ஈடுபாடு உள்ளதோ அவற்றில் அவர்கள் மேலும் சிறப்புற விளங்கவும் திட்டங்கள் தீட்டப்பட்டன.

நாடெங்கிலும் உள்ள பள்ளிக்கூடங்களையும் குருகுலங்களையும், நிர்வகிக்க ஒரு கல்வி அதிகாரியைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பு ராஜகுரு மகேந்திரரிடம் ஒப்படைக்கப்பட்டது. கல்வி அதிகாரியாக இருப்பவர் வெறும் கல்வி கேள்விகளில் சிறந்தவராக இருந்தால் மட்டும் போதாது என்றும் பல பள்ளிகளையும் நிர்வகிக்கும் திறமையும் அவற்றின் முன்னேற்றத்

-மீனா ஜெயராம்-



திற்கான புதிய சிந்தனைகளும் தொலைநோக்கம் கொண்டவராக இருத்தல் முக்கியம் என்று மன்னனும் ராஜகுருவும் கருதினர். இது ஒரு முக்கியமான பதவி என்பதால் நாட்டில் பலர் இந்தப் பதவியைப் பெற போட்டிஇட்டனர். ஆனால் கல்வி அதிகாரியாக ஆசை கொண்ட பலருக்கும் அதற்குரிய தகுதிகள் இல்லை. இவ்வாறு அந்தப் பதவியை நாடி வந்த பலரும் ராஜகுருவால் நிராகரிக்கப் பட்டனர்.

தலைநகரத்திற்கு அருகில் இருந்த ஒரு கிராமத்தில் இந்திரதத்தன் என்ற கல்வி கேள்விகளில் கரைகண்ட ஒரு வாலிபன் இருந்தான். காசியில் பல்கலைக் கழகத்தில் மிகச் சிறப்பாக பயின்று ஊர் திரும்பிய இந்திரதத்தனுக்கு தான் கல்வி அதிகாரியாகி அந்தத் துறையில் பல முன்னேற்றங்களை அவர்கள் புரிய வேண்டும் என்ற தீவிர அவா இருந்தது. ஒரு நாள் அவன் தலை நகரை அடைந்து ராஜ குருவை சந்திக்கத் தயாரானான்.

ஆனால் தலைநகரை அடைந்த வுடனேயே ராஜகுருவை சந்திக்காமல் முதலில் கல்வி அதிகாரிப் பதவியை அடைய முயல்பவர்களிடம் என்ன குணாதியங்கள் எதிர்பார்க்கப் படுகின்றன என்பது பற்றியும் நாட்டில் உள்ள பள்ளிகளைப் பற்றியும் நடைமுறையிலிருந்த கல்வித்திட்டங்களைப் பற்றியும் நன்றாகத் தெரிந்து கொண்டான். பிறகு இரண்டு நாள் கழித்து அவன் ராஜகுருவை சந்தித்தான். அந்த சமயம் ராஜகுரு ஏற்கனவே துர்ஜயன் விக்கிரமன் என்ற இரண்டு நபர்களை அந்தப் பதவிக்காக சோதனை செய்து கொண்டிருந்தார். அவர்கள் இருவரும் நாட்டின் பெரிய அதிகாரிகளின் புதல்வர்கள் ஆவர்.

ராஜகுரு இந்திரத்தனை நோக்கி தலைநகரத்திற்கு வந்து இரண்டு நாட்கள் கழித்து தன்னை சந்திக்க வந்ததன் காரணத்தைக் கேட்டார். அதற்கு அவன், ''வணக்கம் ராஜகுரு அவர்களே! கல்வி அதிகாரியிட மிருந்து நீங்கள் என்ன எதிர் பார்க்கிறீர்கள். இங்குள்ள கல்வி முறை எப்படியுள்ளது என்பதைப் பற்றி ஆராய்ச்சி செய்ய இரண்டு நாட்கள் எடுத்துக் கொண்டேன். நான் பார்த்து அறிந்தவை என்ன என்றால் இங்குள்ள பள்ளிகளில் கல்வி முறை சீராக இல்லை. ஒவ்வொரு பள்ளி

யிலும் ஆசிரியர்கள் தங்கள் விருப்பப் படி கல்வி புகட்டுகின்றனர். இந்த நாட்டில் கற்க விரும்பும் மாணவர் களின் எண்ணிக்கையும் பள்ளிகளின் எண்ணிக்கையும் சரியாகப் பொருந்த வில்லை. இன்னும் ஏராளமான பள்ளிகளும் ஆசிரியர்களும் தேவை. தவிர மாணவர்கள் ஒவ்வொரு வருக்கும் எந்தத் துறையில் ஆர்வம் உள்ளதோ, அந்தத் துறையில் அவர் களை ஊக்குவிக்குமாறு கல்வி கற்பிக்கப்பட வேண்டும். அவர்கள் பெறும் கல்வியறிவு நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் பயன்படுவதாக அமைய வேண்டும். இதுதான் என்னுடைய அபிப்பிராயம்'' என்றான். தேர்வை சந்திக்கும் முன்னரே, இவ்வளவு தெளிவாக நாட்டில் உள்ள கல்வி முறை களையும் தனது பொறுப்பினையும் ஆழ்ந்து ஆராய்ந்து செயற்பட்ட இந்திரதத்தனை ராஜகுருவுக்கு மிகவும் பிடித்து விட்டது. ஆயினும் அவர், ''இந்திரதத்தா, இந்தப் பதவி உனக்கு கிடைக்கும் என்று நினைக்கிறாயா?'' என்று கேட்டார்.

''நினைக்கவில்லை ஐயா, நம்பு கிறேன். ஏனெனில் நான் ஒரு பொறுப்பை ஏற்பதற்கு முன் ஆழ்ந்து சிந்திப்பேன். ஏற்றுக் கொண்டவுடன் முழு முயற்சி செய்து அந்தப் பொறுப்பை சரிவர நிறைவேற்று வேன்,'' என்றான்.

அவனது விடையில் மேலும் மகிழ்ச்சியடைந்த ராஜகுரு ''சரி, இப்போது மற்ற இருவருடனும்



உனக்கும் நேர்முகத்தேர்வு நடத்தப் போகிறேன். நான் கேட்கும் கேள்வி களுக்கு விடை அளிப்பாய்'' என்றார். பிறகு துர்ஜயனையும் விக்கிர மனையும் இந்திரதத்தனையும் பார்த்துக் கேட்டார். ''மனம் மிக வேகமாக செல்லக்கூடியது. அதற்கு அடுத்து மிக விரைவாகச் செல்வது எது?'' என்றார்.

''காற்று'' என்று துர்ஜயன் சொல்ல ''நெருப்பு'' என்றான் விக்கிரமன்.

''மனதிற்கு அடுத்து மிக விரை வாகச் செல்வது வதந்திகளே'' என்று சரியாக விடையளித்தான் இந்திர தத்தன். ''மனிதனை எரிப்பது எது?'' என்று ராஜகுரு அடுத்த கேள்வி கேட்டார். விக்கிரமனும, துர்ஜயனும் ''நெருப்பு'' என்றனர். மனிதனைச் சுட்டெரிப்பது அவன் மீது சுமத்தப் படும் அபாண்டமான பழியும். அவனுக்கு இழைக்கப்படும் நயவஞ் சகமுமே'' என்று விடையளித்தான் இந்திரதத்தன்.

அவனது சரியான விடையால் மகிழ்ந்த ராஜகுரு, ''ஒரு மனிதனை அழிப்பது எது?'' என்று கேட்டார். ''நோய்'' என்று துர்ஜயன் சொல்ல, ''கவலை'' என்றான் விக்கிரமன். ''மனிதனை அழிப்பது அவனது பேராசையும் கோபமும், தீய எண்ணங்களுமே'' என்று மூன்றாம் முறையாக ராஜகுரு எதிர்பார்த்த பதிலை இந்திரதத்தன் கூறினான். இறுதியாக ராஜகுரு ''இந்திரதத்தா, இந்தப் பதவி உனக்கு கிடைத்தால் நீ அதை எப்படி நிர்வகிப்பாய்?'' என்று கேட்டார்.

''ஐயா, மாணவர்களின் ஆர்வம், நாட்டத்திற்கேற்ப கல்வியை தீர்மானம் செய்வேன். உங்களைப் போன்ற சான்றோர்களின் அறிவுரை களைக் கேட்டு, சிறப்பாகப் பணி செய்து இந்த நாட்டின் கல்வியின் தரத்தை உயர்த்துவேன்'' என்று விடையளித்தான். இந்திரதத்தனின் விடைகளால் திருப்தியடைந்த ராஜகுரு அவனையே கல்வி அதிகாரி யாக்க மன்னனுக்கு சிபாரிசு செய்தார். இந்திரதத்தனும் கல்வி அதிகாரியாகி தன் கடமைகளை நிறைவேற்றி அனைவரது நன்மதிப்பையும் பெற்றான்.



# தளபதியின் குற்றம்

**சீ**ன தேசத்தின் தலைநகரான பெய்ஜிங் முன்னொரு காலத்தில் ஒரு சிறிய நகரமாக சூ என்ற பெயருடன் விளங்கியது. 2600 ஆண்டுகளுக்கு முன் அந்த நகரத்தை சுவாங் என்ற சீன மன்னர் ஆண்டு வந்தார். அவருடைய காலத்தில் குறுநில மன்னர்கள் எப்போதும் ஒருவருடன் ஒருவர் போர் தொடுத்துக் கொண்டே இருந்தனர். ஒரு முறை நடந்த போரில், சுவாஸ் மகத்தான வெற்றி அடைந்தார். அந்த வெற்றியைக் கொண்டாடுவதற்காக ஒரு பெரிய விருந்துக்கு ஏற்பாடு செய்தார். போரில் வெற்றி பெறக் காரண மாயிருந்த பல ராணுவ அதிகாரி களையும் தளபதிகளையும் மற்ற பிரமுகர்களையும் விருந்துக்கு அழைத்திருந்தார்.



பெரிய மூங்கில் பந்தங்களை நட்டு பந்தல் போட்டு, அங்கே விருந்து நடத்தப்பட்டது. அப்போது மன்னர் சுவாங் தனது அருமை மகளை அழைத்து அங்கு கூடியிருந்த விருந்தினர்கள் மீது பன்னீர் தெளித்து மரியாதை செய்யச் சொன்னார். இவ்வாறு இளவரசியே நேரடியாக பன்னீர் தெளித்து கௌரவித்ததைக் கண்டு விருந்தினர்கள் மகிழ்ந்து போயினர்.

இளவரசி அங்குள்ளவர்களை இவ்வாறு கௌரவித்துக் கொண்டிருக் கையில் திடீரென்று பலமாக சுழற் காற்று வீசியது. இதனால் ஏற்றப் பட்டிருந்த மெழுகுவர்த்திகள் அனைத்தும் அணைந்து போயின. அது மட்டுமல்லாமல் பந்தலிலிருந்த மூங்கில்கள் எல்லாம் தடதடவென காற்றில் ஆட ஆரம்பித்தன. இசை, நடனம் ஆகியவை நிறுத்தப் பட்டன. எங்கும் ஒரே இருள் மயம்.

அந்த இருளில் திடீரென இளவரசி பதற்றத்துடன் மிக விரைவாக மன்னரிடம் ஓடி வந்தாள். தன் தந்தையிடம் ''அப்பா, விளக்குகள் அணைந்து இருட்டாயிருந்த சமயம், ஒரு தளபதி என்னைப் பிடித்து



இழுத்துத் தள்ளி விட்டார். தற்செயலாக நான் அவர் மேலங்கியிலுள்ள ரிப்பனைப் பிடித்துக் கொள்ள, அந்த ரிப்பன் அறுந்து விட்டது. மீண்டும் மெழுகுவர்த்திகள் ஏற்றப்பட்டதும், எல்லா தளபதிகளையும் இங்கு வந்து நிற்கச் சொல்லுங்கள். அறுந்த ரிப்பனைக் கொண்டு அவருக்குத் தண்டனை அளியுங்கள்'' என்று மன்னருக்கு மட்டும் கேட்கும்படி கிசுகிசுத்தார்.

அவளுக்கு ஆறுதல் கூறிய மன்னர் எழுந்து நின்றார். இதற்குள் மெழுகு வர்த்திகள் ஏற்றப்பட்டு விட்டன. ''விருந்தினர்களே'' என்று தொடங்கினார் மன்னர். தன் தந்தை அடுத்து என்ன அறிவிக்கப் போகிறார் என்று ஆவலுடன் இளவரசி காத்திருந்தாள். இளவரசியைத் தொடுவதே பெருங் குற்றம் என்று கருதப்பட்ட காலத்தில், அவளைப் பிடித்து தள்ளி விட்ட தளபதிக்கு நிச்சயம் மரண தண்டனை தான் கிடைக்கும் என்று அவளுக்குத் தெரியும். தன் உயிரை இழக்கப் போகும் தளபதியை அடையாளம் காட்டத் தயாரானாள்.

''விருந்தினர்களே! நான் சொல்வதை கவனமாகக் கேளுங்கள். இங்கு கூடியுள்ள தளபதிகள் எல்லாம் தங்கள் மேலங்கிகளில் ராணுவச் சின்னமான ஒரு ரிப்பனை பொருத்திக் கொண்டிருக்கிறீர்கள் அல்லவா! இப்போது போர் முடிந்து, நாம் வெற்றி பெற்று விட்டோம். ஆகவே சமாதானத்திற்கு அடையாளமாக தங்கள் ரிப்பன்களை கழற்றி எறிந்து விடுங்கள்,'' என விநோதமான உத்திரவைப் பிறப்பித்தார். எல்லோரும் தங்கள் ரிப்பன்களை கழற்றி வைத்து விட்டனர். விருந்து தொடர்ந்தது. இளவரசி தன் தந்தையின் செய்கையினால் பெருத்த ஏமாற்றம் அடைந்தாள்.

விருந்து முடிந்து அரண்மனைக்குத் திரும்பியதும் மன்னர் இளவரசியை அழைத்து, ''மகளே உன்னுடைய கோபமும் ஏமாற்றமும் எனக்குப் புரிகிறது. முதலில் இந்த வெற்றி விழாவுக்குக் காரணம் யார் என்று யோசி. தன்னுயிரைப் பொருட்படுத்தாது வீரத்துடன் போர் புரிந்த நம் தளபதிகளே. அவர்களில் ஒருவர் என்ன காரணத்தினாலோ உன்னிடம் இவ்வாறு நடந்து கொண்டு விட்டார். ஆனால் நீ சொன்னவாறு அவரை

அடையாளம் கண்டால், அவருக்கு மட்டுமல்ல அனைவருக்கும் மன வருத்தம் ஏற்பட்டிருக்கும். வெற்றி விழா சோக விழாவாக மாறி இருக்கும். அது உன்னையும் பல ஆண்டுகள் பாதித்து விடும். ஆகவே நடந்ததை மறப்போம்'' என்று சமாதானம் கூறினார்.

இது நடந்து ஒரு ஆண்டு ஆகியிருக்கும். மீண்டும் அயல் நாட்டு அரசன் ஒருவனுடன் சுவாங் போர் தொடுக்க நேரிட்டது. எதிர் பாராத விதமாக சுவாஸ் போரில் ஒரு சமயம் பகைவர்களால் சூழப் பட்டார். தப்பித்துக் கொள்ள வாய்ப்பே இல்லை தனக்கு மரணம் நிச்சயம் என்று மன்னர் சுவாங் எண்ணிக் கொண்டிருந்தபோது அவரது தளபதிகளில் ஒருவன், எதிரி களுடன் நடத்திய அதிரடித் தாக்கு தலால் மன்னர் சுவாங் பிழைத்தார். இறுதியில் சுவாங் வெற்றியும் பெற்றார். இவ்வாறு மிகுந்த துணிச்சலுடன் தன்னைக் காப் பாற்றிய தளபதியை சுவாங் தனியே அழைத்து அவனை வெகுவாகப் பாராட்டிப் பரிசு அளிக்க முயன்றபோது, அந்த தளபதி ''அரசே, ஏற்கனவே ஓராண்டுக்கு முன்பு என் உயிரையே எனக்குப் பரிசாக அளித்திருக்கிறீர்கள்'' என்றான். உடனே மன்னருக்கு அந்த தளபதி யாரென்று புரிந்து விட்டது. அவர்தான் இளவரசியின் மனதைப் புண் படுத்தியவர். அந்த தளபதி மேலும் சொன்னால், ''ஆம் அரசே நான்தான் அந்த தளபதி. இளவரசி என் அருகில் வந்த போது பேய்க்காற்றில் ஆடிய மூங்கில் ஒன்று சரிந்து அவள் மேல் விழத் தெரிந்தது. இளவரசியைக் காப்பாற்றவே நான் அவளைப் பிடித்துத் தள்ளி விட்டேன். தாங்கள் கருணை கூர்ந்து என்னை அன்று காப்பாற்றினீர்கள். அதை ஒப்பிடு கையில் இன்று நான் உங்களைக் காத்தது அப்படி ஒன்றும் பெரிய விஷயமல்ல'' என்றான்.

அதைக்கேட்டு சுவாங் அவனை அன்புடன் தழுவிக் கொண்டார். தந்தை மூலம் நடந்த விஷயத்தை அறிந்த இளவரசியும் உணர்ச்சி வசப்பட்டு கண்ணீர் வடித்து அந்த தளபதிக்கு மானசீகமான நன்றி கூறினாள்.





# நன்றிக்கடன்

**பி**ரம்மதத்தன் காசியை ஆண்ட காலத்தில் போதிசத்வர் மிக அழகான கருப்புக் காளைக் கன்றாகப் பிறந்தார். அது மிக அழகாக இருந்ததால் அதன் எஜமானனும் ஊரிலுள்ள மற்றவர்களும் அதனைத் தடவிக் கொடுத்து அதன் அழகில் மயங்கி வந்தார்கள்.

அந்தக் கன்றை வளர்த்து வந்த எஜமானன் திடீரென வேறு ஒரு ஊருக்குக் குடிபெயர்ந்து போக வேண்டியதாயிற்று. எனவே தன் கருப்புக் காளைக் கன்றைத் தான் குடியிருந்த வீட்டு சொந்தக்காரியான கிழவியிடம் தான் கொடுக்க வேண்டிய வாடகை பாக்கிக்காகக் கொடுத்து விட்டுச் சென்றான்.

கிழவியும் அந்தக் கன்றைத் தன் மகனை வளர்ப்பது போல வளர்த்தாள். கழுநீர், கஞ்சி, பொட்டு, பிண்ணாக்கு போன்றவைகளை அதற்கு அவள் கொடுத்தாள். தினமும் அதனைக் கால்வாய்க்கு ஓட்டிப் போய் குளிப்பாட்டுவாள். அதனை அவள் கட்டிப் போடாமல் அதன் இஷ்டப்படி ஊர் முழுதும் சுற்றி வரவும் விட்டிருந்தாள்.

காளைக் கன்றும் ஊர் முழுவதும் திரிந்து புல் மேயும். சிறுவர்கள் அதன் மீது ஏறி சவாரி செய்து மகிழ்வார்கள். அதனைத் தடவிக் கொடுப்பார்கள்.

அந்தக் கன்று ஒருநாள் ''இந்தக் கிழவி என்னை எவ்வளவு பிரியத்துடன் வளர்க்கிறாள்! இவளோ பரம ஏழை. இவளுக்கு நான் எப்படியாவது நிறைய பணம் சம்பாதித்துக் கொடுக்க வேண்டும்'' என மனதில் நினைத்துக் கொண்டது.

ஒரு நாள் ஐநூறு வண்டிகளில் உணவு தானியங்களை ஏற்றிக் கொண்டு ஒரு வியாபாரி போதிசத்வர் இருந்த ஊருக்கு வந்து கொண்டிருந்தான். வண்டிகள் எவ்வித இடைஞ்சலும் இல்லாமல் வந்து கொண்டு இருந்தன. ஆனால் ஊருக்குச் சற்று

முன் ஓரிடத்தில் ஒரு சிறிய ஆற்றைக் கடக்க வேண்டி வந்த போது முதலில் ஆற்றில் இறங்கிய வண்டியின் சக்கரம் மணலில் ஆழமாகப் புதைந்து விட்டது. முதலாவது வண்டி நின்று விட்டதால் அதன் பின் வந்த வண்டிகள் முன்னே போக வழி இல்லாமல் நின்று விட்டன.

முதலாவது வண்டியை மணலில் இருந்து வெளிக் கொண்டுவர வண்டிக் காரர்கள் எவ்வளவோ முயன்று பார்த்தார்கள். ஆனால் முடிய வில்லை. அப்போது கருப்புக் காளைக் கன்றான போதிசத்வர் மற்ற மாடுகளோடு ஆற்றின் எதிர்க் கரையில் புல்மேய்ந்து கொண்டு இருந்தார்.

பல எருதுகள் இருப்பது கண்டு வியாபாரி அங்கு போய் ஏதாவது ஒரு எருதைக் கொண்டு வந்து வண்டியில் பூட்டி ஓட்டிப் பார்க்கலாம் என நினைத்தான். அவன் கண்ணில் கறுப்புக் காளைக் கன்று பட்டது. அதனை இழுத்துப் போக எண்ணி அங்கே இருந்த மாடு மேய்ப் பவர்களிடம் ''இந்தக் கன்று யாருடையது? இதைக் கொண்டு போய் என் வண்டியை மணலிலிருந்து வெளியே கொண்டு வருகிறேன். அதற்காக என்ன பணம் கேட்டாலும் கொடுக்கிறேன்'' என்றான்.

அவர்களோ ''இது யாருக்கும் சொந்தம் இல்லை. இது தன் இஷ்டம் வந்தபடி திரியும்.'' என்றார்கள். உடனே வியாபாரிகன்றின் கழுத்தில் கயிறைக் கட்டி இழுக்கலானான்.



ஆனால் அது தான் இருந்த இடத்தை விட்டு அசையவே இல்லை.

அதை இழுத்துப் போக முடியாது எனக் கண்ட வியாபாரி சற்று யோசித்து ''ஏ கன்றே! உன்னிடம் அபார சக்தி இருக்கிறது. என் ஐநூறு வண்டிகளும் இந்த ஆற்றைக் கடந்து போயாக வேண்டும். நீ இதற்கு உதவினால் உனக்கு ஒரு வண்டிக்கு இரண்டு வராகன்கள் வீதம் கொடுக்கி றேன்'' என்றான்.

வியாபாரி இப்படிச் சொன்னதும் அந்தக் கன்று உடனே அவனோடு கிளம்பியது. அது மணலில் அகப் பட்ட வண்டியிடம் போய் நின்றது. அதை வண்டிக்காரர்கள் அந்த வண்டியில் பூட்டினார்கள். அந்தக் காளைக் கன்று மறு வினாடியே வண்டியை இழுத்துக் கொண்டு போய் மறுகரையில் சேர்த்தது. இப்படியே

அது ஐநூறு வண்டிகளையும் ஆற்றில் இழுத்துப் போய் மறுகரையில் கொண்டு போய் நிறுத்தியது.

தன் வேலை முடிந்ததும் வியாபாரி ஒரு பெரிய பெட்டியில் ஐநூறு வராகன்களைப் போட்டு அந்தக் கன்றின் கழுத்தில் கட்டினான். வியாபாரி சொன்னபடி நடக்காமல் ஏமாற்ற முயல்வதைக் கண்ட போதி சத்வர் சட்டென எல்லா வண்டி களுக்கும் முன்னதாக போய் வழியில் குறுக்கே நின்று கொண்டார்.

அப்போது அந்த வியாபாரி அந்த காளைக் கன்று எல்லாக் கன்றுகளைப் போன்றதல்ல என்றும் மிகவும் அபூர்வசக்தி வாய்ந்தது என்றும் தெரிந்து கொண்டான். உடனே மேலும் ஐநூறு வராகன்களை அந்தப் பெட்டியில் போட்டு மூடி ''ஐயா! என்னை மன்னித்து விடுங்கள். இப்போது நான் சொன்னபடி பணம் கொடுத்து விட்டேன். இனி என் வண்டிகள் போக வழியை விடுங்கள்'' என வேண்டினான். காளைக் கன்றும் அங்கிருந்து கிளம்பி கிழவியின் வீட்டிற்குப் போயிற்று. ஐநூறு வண்டிகளை இழுத்ததால் அது மிகவும் களைத்தும் போயிருந்தது. அப்போது அதன் கழுத்தில் கட்டப்பட்டிருந்த பெட்டியை கிழவி பார்த்தாள்.

அதை அவிழ்த்துப் பெட்டியைத் திறந்து கிழவி பார்த்தாள். அதில் ஆயிரம் வராகன்கள் இருப்பது கண்டு ஆச்சரியப் பட்டாள். இதற்குள் மாடு மேய்ப்பவர்கள் அங்கு வந்து நடந்ததையெல்லாம் கூறினார்கள்.

கிழவியின் கண்களில் கண்ணீர் நிறைந்து விட்டது ''எனக்காக நீ எவ்வளவு துன்பப்பட்டாய்? இந்தப் பணத்தை வைத்துக் கொண்டு நான் என்ன செய்யப் போகிறேன்'' என்றாள். பிறகு அந்தக் கன்றின் உடலில் எண்ணெய் தேய்த்துத் தடவி அதன் வலியை போகச் செய்தாள்.

இவ்வாறாக போதிசத்வர் தன்னை வளர்த்த கிழவிக்குத் தன் நன்றிக் கடனைத் தீர்த்து கொஞ்ச நாட்கள் வரை கருப்புக் காளைக் கன்றாகவே இருந்தார்.





# மகாவிஷ்ணு

கீழே விழுந்த ஜமதக்னி முனிவர் இறந்தவர் போலானார். அவரது மனைவி ரேணுகாதேவி அவரது உடலின் மீது விழுந்து கதறிக் கதறி அழுதாள். அப்போதுதான் பரசுராமர் காட்டிலிருந்து திரும்பி வந்தார். நடந்ததை அறிந்த அவர் தம் கோடாலியை எடுத்துக் கொண்டு மாகிஷ்மதி நகருக்குச் சென்றார். இச்சமயம் பிருகு முனிவர் ஜமதக்னியின் ஆசிரமத்திற்கு வந்தார். அவர் ரேணுகாதேவிக்கு ஆறுதல் கூறி ஜமதக்னியின் உடலிலிருந்து உயிர் போய் விடாமல் தடுத்து நிறுத்தி அவரைப் பிழைக்க வைத்தார்.

மாகிஷ்மதி நகருக்கு ஓட்டிச் செல்லப்பட்ட பசு அவர்கள் விரும்பியதைக் கொடுக்கவில்லை. அதனால் அதனை அடித்துத் துன்புறுத்தலாயினர். அச்சமயம் அங்கே போய்ச் சேர்ந்த பரசுராமர் அவர்களைத் தாக்கவே அவர்கள் பயந்து ஓடி விட்டார்கள். பரசுராமரும் பசுவைத் தடவிக் கொடுத்து தம் தந்தையின் ஆசிரமத்திற்கு அனுப்பி வைத்தார்.

பரசுராமர் கார்த்தவீரியனை போருக்கு அழைக்கவே அவன் வந்திருப்பது சாதாரண முனி குமாரன் தானே என எண்ணி விட்டான். ஆனால் தான் எய்த அஸ்திரங்களை எல்லாம் பரசுராமர் தவிடு பொடியாக்கி விட்டு பயங்கரமாக தாக்குவது கண்டு திகைத்தான். பரசுராமர் தன் கோடாலியால் அவனது ஆயிரம் கைகளை மரக் கிளைகளை வெட்டுவது போல வெட்டித் தள்ளினார். அவன் தன் சக்தியை இழந்து நிலை குலைந்தான்.



எல்லோருக்கும் உண்டு. நீங்கள் சொல்வதற்காக வேண்டுமானால் தவம் செய்கிறேன். ஆனால் நான் செய்த செயலுக்குப் பிராயச்சித்தமாக அல்ல'' எனக் கூறிக் காட்டிற்குள் போய் தவத்தில் மூழ்கி விட்டார்.

கார்த்தவீரியனின் ஆயிரம் புதல்வர்கள் ஹைஹயக்ஷத்திரியர் களைக் கூட்டிக் கொண்டு ஜமதக்னி முனிவரின் ஆசிரமத்தைத் தாக்கி னார்கள். ஜமதக்கினி முனிவர் ஆழ்ந்த தவத்தில் இருந்தும் அவர் மீது பாய்ந்தார்கள். அது கண்டு ரேணுகா தேவி ''ராமா!! ராமா!! என இருபத் தோரு முறை உரக்கக் கூவினாள்.

ஹைஹயர்கள் ஜமதக்னியின் தலையை வெட்டி எறிந்தார்கள். ரேணுகாதேவி மார்பிலும் வயிற்றி லும் அடித்துக் கொண்டு அழுதாள். ஜமதக்னி முனிவரின் தலை உருண்டு போய் பாறைகளுக்கிடையே அகப் பட்டுக் கொண்டது. ஹைஹயர்கள் அந்த ஆசிரமத்திற்கு நெருப்பை மூட்டி விட்டார்கள். அந்தத் தீயில் ரேணுகாதேவி எரிந்து சாம்பலானாள்.

காட்டில் தவம் செய்து கொண்டி ருந்த பரசுராமரின் காதில் ரேணுகா இருபத்தோரு தடவை கூப்பிட்டது விழுந்தது. அவர் எழுந்து தம் ஆசிரமத்திற்கு சென்றார். அப்போது ஆசிரமம் எரிந்து கொண்டிருப் பதையும் தம் தாய் தந்தையர் இறந்து போனதையும் கண்டார். அவர் தம் கோடாலியை எடுத்துக் கொண்டு ஹைஹயர்களைத் தாக்கி வெட்டிக் கொன்று குவிக்கலானார்.

அப்போதுதான் தன் முன் நிற்பது மகாவிஷ்ணுவின் அவதாரம் எனவும் தான் அவரது சக்கராயுதம் எனவும் அவன் தெரிந்து கொண்டான். அவன் உடனே பரசுராமரை வணங்கி சக்ராயுதத்தில் போய் கலந்து விட்டான். பரசுராமரும் தம் தந்தையின் ஆசிரமத்திற்குத் திரும்பி வந்தார்.

அங்கு தன் தந்தை உயிரோடு இருப்பது கண்டு மகிழ்ந்து தாம் செய்ததை எல்லாம் அவரிடம் கூறினார். அப்போது ஜமதக்னி முனிவர் ''மகனே, நீ செய்தது யோகி களான நாம் செய்யத்தகாத செயல். இதற்குப் பரிகாரமாக நீ தவம் செய்'' எனக் கூறினார்.

அப்போது பரசுராமர் ''தந்தையே. ஒரு மன்னன் நெறி தவறி நடந்தால் அவனை தண்டிக்கும் உரிமை



பாறைகளிடையே கிடக்கும் தன் தந்தையின் தலையை எடுத்துக் கையில் அவர் வைத்துக் கொண்டு ''தந்தையே! இப்படி கோரமான செயலை ஷத்திரியர்கள் செய்தார்கள். எனவே ஷத்திரியர்களின் ரத்தத்தா லேயே உங்களுக்குத் தர்ப்பணம் செய்கிறேன். இந்தப் பூ உலகிலேயே ஒரு ஷத்திரியன் கூட இல்லாமல் அழிப்பதாகச் சத்தியம் செய்கிறேன'' என எட்டு திசையிலும் எதிரொ லிக்கக் கூறினார். அதைக் கேட்டு யாவரும் நடுங்கினார்கள். பல முனிவர்கள் வந்து அவரது கோபத் தைத் தணிக்கலானார்கள்.

பிருகு முனிவரும் ''ராமா! துஷ்டர்களைதண்டிப்பது பகவானின் வேலை. நீ அதனை மேற்கொள்ள வேண்டாமே'' என்றார். அதற்கு பரசுராமர் ''அந்த பகவான் மனித ரூபத்தில் வந்து தான் துஷ்டர்களை தண்டிக்கிறார். அப்படிப் பட்ட அவதாரம் நான் என்று ஏன் பெரியவர்களான நீங்கள் நினைக்க கூடாது?'' எனக் கூறி விட்டு அங்கிருந்து அமர்ந்து அவர் சிவனைக் குறித்து கடுந்தவம் புரிந்தார்.

சிவனாரும் பரசுராமரின் முன் தோன்றவே பரசுராமரும் ''என்சபதம் நிறைவேற எனக்கு சக்தியை அளிக்க வேண்டுகிறேன்'' என்ற வரத்தைக் கேட்டார். சிவனும் அவருக்கு பல அஸ்திரங்களை கொடுத்ததோடு ''உனக்கு பார்க்க வாஸ்திரம் என்ற மிகச் சக்தி வாய்ந்த அஸ்திரமும் கொடுக்கிறேன்'' எனக் கூறி ஆசீர்வதித்து அனுப்பினார். பின்னர் பரசுராமர் கோலோகத்திற்குச் சென்று விஷ்ணுவை தரிசித்து கிருஷ்ண கவசத்தை அடைந்தார். தன் அம்சத் தோடு கூடிய வில் ஒன்றையும் அவர் பரசுராமருக்கு அளித்து அதனை தான் ராமாவதாரம் எடுக்கும் போது திரும்ப வாங்கிக் கொள்வதாகக் கூறினார்.

பரசுராமர் அங்கிருந்து திரும்பிய தும் ஷத்திரியர்களை ஒழிக்கலானார். கார்த்தவீரியனின் புதல்வர்களும் ஹைஹயர்களும் நகரை விட்டே ஓடிப் போய் விட்டார்கள். பரசுராமர் அந்நகரின் மீது அக்கினியஸ்திரத்தை எய்தார். மாகிஷ்மதி நகரம் எரிந்து சாம்பலாகியது.

கார்த்தவீரியனின் புதல்வர்களும் ஹைஹயஷத்திரியர்களும் மற்றும் பல அரசர்களின் உதவியோடு பரசுராமரை எதிர்க்க வந்தார்கள்.

பரசுராமர் தம் கோடாடாலியால் அவர்களை எல்லாம் வெட்டி அவர்களது ரத்தத்தை ஐந்து மடுக்களில் நிரப்பினார். தம் தந்தை ஜமதக்னி முனிவரின் தலையை அவர் அந்த மடுக்களில் முக்கி எடுத்து தர்ப்பணம் செய்து பின்னர் அதனை தகனம் செய்தார்.

பின்னர் பரசுராமர் ஒரு யாகம் செய்து தம் கறைகளைப் போக்கித் தம் தந்தையின் ஈமச்சடங்குகளைச் செய்தார். பின்னர் அவர் ஷத்திரியர்களை அடியோடு ஒழிக்க கிளம்பினார். தம் கோடாலியைச் சுழற்றி ஷத்திரியர்களை மூலை முடுக்கு விடாமல் தேடிப் பிடித்து ஒழிக்கலானார். இதனால் ஷத்திரியத் தாய்மார்கள் தம் குழந்தைகளையும் வம்சத்தையும் காக்க பிராம்மணர்களில் வீடுகளில் மறைத்து வைத்தார்கள். தாமும் பிராம்மண ஸ்திரீகள் போல மாறி பரசுராமரிடமிருந்து தப்பினார்கள்.

பரசுராமர் இப்படி இருபத்தோரு முறை நாடு முழுவதும் அலசி ஷத்திரியர்களைத் தேடிப் பிடித்துக் கொன்றார். ஷத்திரியர்கள் எல்லோருமே அடியோடு அழிந்து விட்டார்கள் என அவர் திருப்தியடைந்ததும் தன்னிடமிருந்த நாடு முழுவதையும் அவர் கஸ்யபருக்கு தானம் செய்து விட்டு தென் கடலினருகே உள்ள மகேந்திரமலைக்குச் சென்று தவம் செய்யலானார்.

பிராம்மணர்களின் வீடுகளிலும் முனிவர்களது ஆசிரமங்களிலும்



மறைந்திருந்து வளர்ந்து வந்த ஷத்திரியக் குழந்தைகள் பெரியவர் களானதும் அவர்களுக்குக் கஸ்யபர் பரசுராமர் தமக்கு அளித்த நாட்டைக் கொடுத்து விட்டார். இதனால் பல நாடுகள் உருவாயின.

இவ்வாறு தோன்றிய இஷ்வாகு வம்சத்தில் பிறந்த ரகு மன்னன் பேரும் புகழும் பெற்று விளங் கினான். இவன் பெயரால் ரகு வம்சம் ஏற்பட்டது. இந்த ரகு வம்சத்தில்தான் மகாவிஷ்ணு தசரத மன்னனின் புதல்வர் இராமராக அவதாரம் எடுத்தார்.

மகாவிஷ்ணுவின் தசாவதாரங் களில் இராமாவதாரத்தை வால்மீகி முனிவர் இராமாயணம் என்ற மாபெரும் காவியமாகப் படைத்தார் என சூதமகரிஷி கூறி இராம கதையைச் சொல்லலானார்.

இரணியகசிபுவும் இரணியாட் சனும் விஷ்ணுவினால் கொல்லப் பட்டனர். அதன் பின் அவர்கள் இரண்டாவது பிறப்பில் இராவண னாகவும் கும்பகர்ணனாகவும் பிறந்து சப்த லோகங்களையும் நடுநடுங்க வைத்தார்கள். இராவணன் கடும் தவம் புரிந்து பிரம்மாவிடமிருந்து தேவர்களாலோ அசுரர்களாலோ யட்சர்களாலோ கந்தர்வர்களாலோ தன் உயிர் போக கூடாது என்ற வரம் பெற்றான்.

கும்பகர்ணன் மலை போல படுத்துக் கிடந்தான். அவன் தவம் செய்து வாய் குளறி வருடத்தில் ஆறு மாதம் தூங்கவும் ஆறு மாதம்



விழித்திருக்கவுமான வரத்தைக் கேட்டுப் பெற்றான்.

இராவணன் குபேரனிடமிருந்து அவனது புஷ்பக விமானத்தைப் பிடுங்கிக் கொண்டதோடு அவனை இலங்காபுரியிலிருந்து விரட்டி அந்நகரத்தையும் தன் வசப்படுத்திக் கொண்டான்.

இராவணனுக்கு பத்துத் தலைகள். அவன் கைலாசத்திற்குப் போன போது அங்கு காவல் புரிந்த நந்தியைப் பார்த்து குரங்கு எனப் பரிகாசம் செய்தான். அவர் அதனால் கோபம் கொண்டு அவனது இலங்கை குரங்குகளால் அழியட்டும் எனச் சபித்தார்.

இராவணன் தன் இருபது கைகளால் கைலாசபர்வதத்தையே தூக்க முயன்றான். அப்போது சிவனார் தம் காலின் கட்டை விரலால்

மலையை இலேசாக அழுத்தினார். இராவணன் மலையின் அடியே அகப்பட்டு நசுங்கலானான். அவன் ஆவென அலறினான். பின்னர் அவன் தனது ஒவ்வொரு தலையாக வெட்டி சிவனாருக்கு அர்ப்பணம் செய்து அவரைத் துதி செய்தான். அவனது சாமகானம் கேட்டு சிவனார் மகிழ்ந்து அவனை விட்டதோடு ஆசீர்வதித்து அனுப்பினார்.

இராவணன் சிவ பக்தனாக இருந்த போதிலும் மிகவும் கொடியவன். மிகவும் அகம்பாவம் கொண்டவன். இராவணனின் மனைவி மண்டோதரி மயனின் மகள். தன் கணவனுக்கு அவள் அவ்வப்போது அறிவுரைகள் கூறி வந்தாள். அவனது தம்பி விபீஷணனும் நேர்மை தவறாது நடப்பவன். அவனும் இராவண னுக்கு நல்ல அறிவுரைகளைச் சொல்லி வந்தான். ஆனால் அவற்றை யெல்லாம் இராவணன் அலட்சியம் செய்தான்.

விந்தியமலைக்குத் தெற்கிலுள்ள பகுதி இராவணனது ஆட்சியில் இருந்தது. ராட்சஸர்கள் இப் பகுதியில் திரிந்து அட்டகாசம் புரிந்தனர். முனிவர்களது தவத்தைக் கலைத்தும் யாகங்கள் நடக்காமலும் செய்து வந்தனர்.

கிருஷத்துவஜர் என்ற மகரிஷி வேதம் ஓதிக் கொண்டிருக்கையில் பிறந்தவள் வேதவதி. அவள் விஷ்ணு வையே தன் கணவராக அடைய வேண்டும் என நினைத்துத் தவம் செய்து கொண்டிருந்தாள். அப்போது இராவணன் அவளிடம் போய் தான் விஷ்ணுவை விட உயர்ந்தவன் என்றும் தன்னை மணந்து கொள்ளும் படியும் கூறி அவளைப் பிடித்து இழுத்தான்.

அவளோ ''அடே துஷ்டா! உன் கைபட்ட இந்த உடலை இப்போதே விடுகிறேன். அடுத்த பிறவியில் நான் சீதையாகப் பிறந்து நீயும் உன் இலங்கையும் அழியக் காரணமாக இருப்பேன்'' எனக் கூறி அக்கினியை வரவழைத்து அதில் விழுந்து உயிர் நீத்தாள். அரக்கர்களை அழிக்க மகாவிஷ்ணு மனிதனாய்ப் பிறந்தார்.





# சுரேகாவின் சாமர்த்தியம்

சுரேகா அவளது பெற்றோர்களுடைய ஒரே மகள். ஐந்து வயதே நிரம்பியிருந்த சுரேகா மிகவும் சாமர்த்தியசாலி. தவிர மிகவும் சுறுசுறுப்பானவள். எப்போதும் மகிழ்ச்சியுடன் குதித்துக் கொண்டும், ஓடிக்கொண்டும் இருக்கும் ஒரு சூட்டிகையான பெண்ணாக இருந்தாள். ஓரிரவு நேரம் சுரேகாவின் அம்மா அவளைக் கூப்பிட்டு ''சுரேகா வீட்டின் கொல்லைப் புறத்திலிருந்து துடைப்பத்தைக் கொஞ்சம் எடுத்துக் கொண்டு வாயேன்'' என்றாள். ''கொல்லைப் பக்கம் ஒரே இருட்டாக உள்ளது. இருட்டென்றால் எனக்கு பயம் அம்மா'' என்று சுரேகா பதில் அளித்தாள்.

''இருட்டைக்கண்டு ஏன் பயப்படுகிறாய்? அங்கு வினாயகர் உனக்குத் துணையிருப்பார். நீ பயப்படாமல் சென்று எடுத்து வா'' என்றாள் அம்மா. ''உண்மையாகவே வினாயகர் அங்கே இருக்கிறாரா?'' என்று கேட்டாள் சுரேகா. ''ஆமாம் குழந்தை. அங்கு மட்டுமில்லை. எங்கும் இருக்கிறார். அவரிடம் பிரார்த்தனை செய்தால் அவர் உனக்குக் கட்டாயம் உதவி செய்வார்'' என்றாள் அம்மா.

கொஞ்ச நேரம் யோசித்த சுரேகா பிறகு மெதுவாகக் கொல்லைப்புறம் வாசல் கதவு வரை சென்றாள். பிறகு தன் கைகளை விரித்து நீட்டிக் கொண்டு ''வினாயகரே, நீங்கள் உண்மையிலேயே இங்கிருந்தால், தயவு செய்து அந்தத் துடைப்பத்தை எடுத்து என் கையில் கொடுத்து விடுங்கள்,'' என்றாள்.

–சுமதி

# ஏமாற்றாதே, ஏமாறாதே

ஒரு நகரத்தில் ஒரு வைர வியாபாரி இருந்தான். சூது வாதறியாத அப்பாவி மக்களை ஏமாற்றி வியாபாரம் செய்வது அவனது வாடிக்கை. ஆனால் தன் சாமர்த்தியங்களை உள்ளூர்க்காரர்களிடம் காட்டாமல், அயலூரிலிருந்து வருபவர்களிடமே காட்டுவது அவனது வழக்கம்.

ஒருநாள் ஒரு கிழவன் அவனது கடையை நாடி வந்தான். ''ஐயா, நான் அயல் நாட்டைச் சேர்ந்தவன். என்னுடைய பேத்திக்குப் பரிசாக ஒரு வைரக் கல்லை கொடுக்க வேண்டும் என்பது என் ஆசை. ஆனால் என்னிடம் ஐநூறு வெள்ளிக் காசுகளே உள்ளன. அதற்குத் தகுந்தாற்போல் ஒரு வைரக் கல்லை எனக்குத் தருவாய். எனக்கு நிறைய கடைகளுக்குப் போய் அலசி ஆராய நேரமில்லை. என்னுடைய கப்பல் இன்னும் ஒரு மணி நேரத்தில் கிளம்பத் தயாராக உள்ளது'' என்றான்.

நல்ல ஏமாளி கிடைத்தான் என்ற மகிழ்ச்சியில் அந்த வியாபாரி வேண்டுமென்றே ஒரு சாதாரண கண்ணாடிக் கல்லைக் கொடுத்து ''இந்தா எடுத்துக் கொள்'' என்றான். வியாபாரி தன்னை ஏமாற்றுகிறான் என்று தெரியாமல் கிழவன் மகிழ்ச்சியுடன் பணத்தைக் கொடுத்து கண்ணாடிக் கல்லை வாங்கிக் கொண்டு சென்று விட்டான்.

ஐந்து ஆண்டுகள் கழித்து ஒரு நாள் ஒரு வாலிபன் அந்த வியாபாரியின் கடைக்கு வந்தான். வியாபாரியைப் பார்த்து ''ஐயா, ஒரு காலத்தில் என் முன்னோர்கள் இந்த நகரத்தில் செல்வச் சீமான்களாக இருந்தனர். ஆனால் காலப்போக்கில் எங்கள் சொத்துக்கள் கரைந்து விட்டன. எங்களிடம் இருக்கும் சில ஆபரணங்களையும் நாங்கள் விற்றுக் கொண்டிருக்கிறோம். என்னுடைய பாட்டியின் வைரக் கல் ஒன்றை விற்று விடலாம் என்று இருக்கிறேன். நீங்கள் அதை வாங்கிக் கொள்வீர்களா?'' என்றான். அதைக் கேட்ட வியாபாரி குதூகலம் அடைந்தான்.



அந்த வாலிபனுடைய வைரக்கல்லை மிகவும் குறைவாகப் பணம் கொடுத்து வாங்கிடலாம் என்ற நம்பிக்கையில் ''எங்கே, காட்டு'' என்றான். ஆனால் அந்த வாலிபன் காட்டிய வைரக்கல்லை பார்த்ததும் அது வெறும் கண்ணாடிக் கல் என்று தெரிந்து கொண்டான்.



''தம்பி, இது வைரம் இல்லை. இது வெறும் கண்ணாடி'' என்றான் வியாபாரி. ''விளையாடாதீர்கள் பெரியவரே! இது எங்கள் பரம்பரை சொத்து. விலை மதிப்புள்ளது. வேறு யாரிடம் கொடுத்தாலும் நல்ல விலைக்குப் போகும்'' என்றான் வாலிபன். ''அப்படியானால் எங்கே நல்ல விலை கிடைக்கிறதோ அங்கே கொடு'' என்று சொல்லி அவனை திருப்பி அனுப்ப வியாபாரி முயற்சி செய்தான்.

''பெரியவரே, நீங்கள் இது வைரம் இல்லை என்றா சொல்கிறீர்கள்! பெரிய தவறு செய்கிறீர்கள். இதை வேறு எங்காவது கொண்டு போய் விற்க முடியும். ஆனால் நீங்கள் சொல்வது தவறு என்பதை நிரூபிக்க, இதை உங்களிடமே விட்டுச் செல்கிறேன். இதை விற்ற பிறகு எனக்குப் பணம் தாருங்கள், போதும்'' என்று கூறிய அந்த வாலிபனுடன் வாக்குவாதம் செய்ய விரும்பாமல் ''சரி, என்ன விலை எதிர்பார்க் கிறாய்?'' என வியாபாரி கேட்க, வாலிபன், ''ஆயிரம் வெள்ளிக் காசுகள்'' என்று சொல்லிவிட்டுச் சென்று விட்டான். வியாபாரியும் அதைக் கடையில் கண்ணாடிப் பெட்டகத்தில் தெரியும் படியாக வைத்தான்.

ஐந்து மாதங்கள் சென்றன. ஒரு நாள் அவன் கடைக்கு ஒரு கனவான் வந்தார். ''என்னுடைய ஒன்று விட்ட சகோதரிக்கு வைரக்கல் தேவை. விலை எவ்வளவு ஆனாலும் பரவா யில்லை. நல்லதாகக் காட்டுங்கள்'' என்றார். அவர் ஒரு செல்வந்தர் என்று தெரிந்து கொண்ட வியாபாரி தன் கடையிலிருந்த எல்லா விலை உயர்ந்த நகைகளையும் அவருக்குக் காட்டினான். அவர் திருப்தி அடைவதாக இல்லை. கடைசியில் அவர் பார்வை அந்தக் கண்ணாடிக் கல்லின் மீது விழுந்தது.

''ஆகா அந்த மாதிரி ஓர் அற்புதமான வைரக் கல்லைத் தான் தேடிக் கொண்டிருந்தேன். நீ ஏன் இதை எனக்குக் காட்டவேயில்லை? சரி, சரி எடு அதை'' என்றார் அந்தக் கனவான். அளவு கடந்த ஆச்சரியத் தால் திகைத்துப் போன வியாபாரி

உடனே சமாளித்துக் கொண்டான். ''அதுவா, அதை நான் ஏன் காட்ட வில்லை என்றால்... அதை... அதை வேறொருவர் விலை பேசிவிட்டுச் சென்றிருக்கிறார்'' என்று பொய் சொன்னான். ''அப்படியா? அவர் என்ன விலை தருவதாகச் சொன்னார்?'' என்று அந்தக் கனவான் கேட்க, வியாபாரியும் பேராசை உந்த ''இரண்டாயிரம் வெள்ளிக் காசுகள்'' என்று மீண்டும் பொய் சொன்னான்.

''நான் மூவாயிரம் காசு தருகிறேன். அதை எனக்காக வைத்திரு. பிடி முன்பணம் நூறு வெள்ளி. மீதியை வீட்டிலிருந்து எடுத்து வருகிறேன். ஆனால் இதை யாருக்கும் கொடுக்காதே'' என்று சொல்லிவிட்டு அந்த நபர் சென்றார். கொஞ்ச நேரத்தில் அந்தக்கல்லை விற்க விரும்பிய வாலிபன் வந்து சேர்ந்தான். ''ஐயா, தயவு செய்து என்னுடைய கல்லைத் திருப்பிக் கொடுங்கள். இதற்கு நல்ல விலை தரக் கூடிய ஆட்கள் இருக்கிறார்கள்'' என்றான். வியாபாரி ''சரி சரி, ஆயிரம் வெள்ளிக் காசு கொடுத்து நானே எடுத்துக் கொள்கிறேன்'' என்று சொல்லி ஆயிரம் காசு அந்த வாலிபனுக்குக் கொடுத்தான்.



வாலிபனும் மகிழ்ச்சியுடன் பணத்தை வாங்கிக் கொண்டு சென்று விட்டான்.

அந்தப் பணக்கார கனவான் எப்போது வருவார் என்று எதிர் பார்த்துக் கொண்டிருந்த வியாபாரிக்கு ஏமாற்றம் தான் மிஞ்சியது. அந்தக் கனவான் வரவேயில்லை.

சில நாட்களில் அந்த வியாபாரிக்கு ஒரு கடிதம் கிடைத்தது. ''பேராசை பிடித்த நயவஞ்சக வியாபாரியே, ஆயிரம் காசுக்கு உன்னிடம் என் கல்லை விற்ற என்னை நினை விருக்கிறதா? ஐந்து ஆண்டுகளுக்கு முன் ஒரு கிழவரை ஏமாற்றி ஐநூறு காசுகளுக்கு ஒரு கண்ணாடிக் கல்லை விற்றாயே ஞாபகம் உள்ளதா? அதே கல்லைத் தான் நான் உன்னிடம் ஆயிரம் காசுகளுக்கு விற்றுள்ளேன். அந்தக் கிழவருடைய பேரன்தான் நான். என் பாட்டனாரை நீ ஏமாற்றியதற்குத் தகுந்த பாடம் புகட்டி விட்டேன்.'' என்று அந்தக் கடிதத்தில் எழுதி இருந்த வாசகங் களைப் படித்து ''ஐயோ, நான் மோசம் போனேனே'' என்று அந்த வியாபாரி தன் தலையில் அடித்துக் கொண்டு கதறினான்.



# பேராசை பெருநஷ்டம்

ஒரு கிராமத்தில் கங்காதரன் என்ற மருத்துவன் இருந்தான். அவன் மிகவும் பேராசை பிடித்தவன். சிகிச்சையின் பெயரால் நோயாளி களிடமிருந்து பெரும் பணத்தைக் கறந்து வந்தான். இதனால் அந்த கிராமத்து மக்கள் கங்காதரனிடம் செல்லவே பயந்தனர். ஆனால் சுற்று வட்டாரத்தில் வேறு மருத்துவர்களே இல்லாததால், வேறு வழியின்றி கங்காதரனிடமே செல்ல வேண்டி நேர்ந்தது.

அதே கிராமத்தில் ராமநாதன் என்ற ஒரு செல்வந்தர் இருந்தார். மிகவும் இரக்க சுபாவமுள்ள அவர், கிராமத்து மக்களுக்குத் தன்னால் இயன்ற உதவிகளை எப்போதும் செய்து வந்ததால், அவர் மீது கிராமத்து மக்களுக்கு மிகுந்த அன்பும் மரியாதையும் இருந்து வந்தது. இதைக் கண்ட கங்காதரனுக்கு ராம நாதன் மேல் பொறாமை ஏற்பட்டது. எப்படியாவது ராமநாதனுக்குத் தீங்கு விளைவிக்க வேண்டும் என்ற கொடிய எண்ணம் கங்காதரனுக்கு ஏற்பட்டது.

ஒருமுறை ராமநாதனின் ஒரே புதல்வனுக்குக் கொடிய நோய் ஏற்பட்டது. கிராமத்தில் வேறு மருத்துவர் இல்லாததால் ராம நாதனுக்கு கங்காதரனையேக் கூப்பிட வேண்டியிருந்தது. ராமநாதனைப் பழி வாங்க இதுதான் வாய்ப்பு என்று மகிழ்ந்த கங்காதரன் உடன் சென்று ராமநாதனின் மகனை சோதித்தான். பிறகு, ''ஐயா உங்கள் மகனுக்கு மிகக் கொடிய நோய் ஏற்பட்டுள்ளது'' என்றான். உடனே ராமநாதன் அவன் கைகளைப் பிடித்துக் கொண்டு எப்படியாவது தன் ஒரே மகனைக் குணப்படுத்துமாறு கெஞ்சினார். மிகவும் வருத்தப்படுபவன் போல் நடித்த கங்காதரன் ''ஐயா, இந்த நோய்க்கு தங்க பஸ்பம் தான் மருந்து. அதைத் தயாரிக்க சுமார் நூறு கிலோ தங்கம் தேவை'' என்று வேண்டு

- 25 ஆண்டுகளுக்கு முன் அம்புலிமாமாவில் வெளியான கதை -



மென்றே பொய் சொன்னான். கங்காதரனின் தீய எண்ணம் ராம நாதனுக்குத் தெரிந்து விட்டது. ''மருத்துவரே என்னுடைய சொத்தின் மதிப்பு அவ்வளவு தேறாதே'' என்றார். அதற்கு ''நான் என்ன செய்யட்டும்? உங்களுக்கு உங்கள் மகன் முக்கியமா இல்லை சொத்து முக்கியமா?'' என்றான் கங்காதரன்.

கங்காதரன் தெரிந்தும் ராம நாதனால் ஒன்றும் செய்ய முடிய வில்லை. வேறு வழியின்றி தன் சொத்து முழுவதும் விற்று கங்காதரன் கேட்ட தங்கத்தைக் கொடுத்து விட்டார். கங்காதரனும் அந்த தங்கத்தை தன்னிடம் ஒளித்து வைத்து விட்டு, சரியான மூலிகை மருந்தைத் தர, ராமநாதன் மகனும் குணமடைந் தான். சொத்து யாவற்றையும் இழந்த ராமநாதன், தன் குடும்பத்துடன் அந்த கிராமத்தை விட்டு எங்கோ சென்று விட்டார். ஆனால் அந்த கிராமத்தில் திடீரென்று ஒரு வதந்தி கிளம்பியது. ராமநாதனை கங்காதரன் மோசடி செய்து விட்டான் என்றும், கிராமத்தை விட்டுச் சென்றுவிட்ட ராமநாதன் கங்காதரனைப் பழி வாங்கத் திட்டமிட்டுள்ளார் என்றும், புரளி ஏற்பட்டது. ராமநாதனிடம் முன்பு வேலை செய்த வேலை யாட்களே இவ்வாறு சொல்ல ஆரம்பித்தவுடன், அந்த கிராமம் முழுவதும் வதந்தியை நம்பியது.

இதைக் கேட்ட கங்காதரன் அஞ்சி நடுங்கலானான். கிராமத்து மக்களின் வெறுப்பை மட்டுமே சம்பாதித் திருந்ததால் நாளைக்குத் தனக்கு ஒரு ஆபத்து என்று வந்தால் அந்த கிராமத்தில் யாருமே தனக்கு உதவி செய்யக் கூட முன் வரமாட்டார்கள் என்று அவனுக்குத் தோன்றியது. ராமநாதனை ஏமாற்றி சம்பாதித்த தங்கத்தை வீட்டில் வைத்திருந்தால் ஆபத்து என்றும் அதை அரசாங்க கஜானாவில் வைத்து விட்டால் பத்திரமாக இருக்கும் என்ற எண்ணம் தோன்றியது.

உடனே அதை செயலாக்க வேண்டி, விசுவாசமான இரு ஆட்களை மட்டும் தன்னுடன் அழைத்துக் கொண்டு, ரகசியமாக ஒரு வண்டியில் அந்தத் தங்கத்தை ஏற்றி, ஒரு ஒருநாள் யாருக்கும் தெரியாமல் கங்காதரன் நகரத்தை நோக்கிக் கிளம் பினான். வழியில் திடீரென அவன்

வண்டியை திபுதிபுவென ஒரு பெரிய கொள்ளைக்காரர்கள்கூட்டம் சூழ்ந்து கொண்டது. கங்காதரனைப் பிடித்து இழுத்துக் கொண்டு போய், அவனையும் அவனது இரு ஆட்களையும் தங்கத்தையும் ஒரு குகைக்குள் கொண்டு போய் அடைத்து விட்டார்கள்.

கொள்ளைக்காரர்களின் செயல் கங்காதரனை வியப்பில் ஆழ்த்தியது. ஏனெனில் அவர்கள் தங்கத்தைத் திருட முயற்சிக்கவில்லை. ஒன்றும் திருடவும் செய்யாமல் தன்னையும் ஏன் கைதியாகப் பிடித்து வைத்துள்ளனர் என்று கங்காதரனுக்குப் புரியவில்லை. தன்னைக் காவல் காத்துக் கொண்டிருந்த கொள்ளைக் காரர்களிடம் மெதுவாக ''ஐயா, உங்களுக்குப் பணம் தானே வேண்டும்! நான் கொஞ்சம் பணம் தருகிறேன் என்னை விட்டு விடுங்கள்'' என்றான். ''உன்னை விட முடியாது'' என்றனர் காவலர்கள். ''சரி விடவேண்டாம். ஆனால் எனக்குப் பசிக்கிறது. எனக்கு ஏதாவது சாப்பிடவும் குடிக்கத் தண்ணீரும் கொடுப்பீர்களா?'' என்று கேட்டான் கங்காதரன்.

''தாராளமாகத் தருகிறோம். ஆனால் அதற்குப் பணம் தர வேண்டும்'' என்றனர் காவலர்கள். ''எவ்வளவு வேண்டும்?'' என்று கங்காதரன் கேட்டான். ''ஒரு வேளை சாப்பாட்டிற்கு ஒரு லட்சம் ரூபாய். ஒரு குவளைத் தண்ணீருக்கு ஐம்பதினாயிரம் ரூபாய்'' என்றனர். ஆயிரம் தேள்கள் கொட்டினது போல் துடித்தான் கங்காதரன். ''இது என்ன



அநியாயம்? ஒரு வேளை சாப்பாட்டின் விலை ஒரு லட்சம் ரூபாயா? நீங்கள் என்ன பகல் கொள்ளை அடிக்கிறீர்கள்?'' என்று கோபத்துடன் கத்தினான் கங்காதரன்.

''ஐயா, நியாயம், அநியாயம் எல்லாம் எங்களுக்குத் தெரியாது. உனக்கு உயிர் முக்கியமானால் சாப்பாடும் தண்ணீரும் வேண்டும். அவை வேண்டுமானால், எங்களுக்கு நாங்கள் கேட்கும் பணம் தர வேண்டும்'' என்றனர் காவலர்கள்.

இரண்டு நாட்கள் கங்காதரன் பொறுத்துப் பார்த்தான். முடியவில்லை. கடைசியில் தன்னிடமுள்ள தங்கத்தைக் கொடுத்து உணவினைப் பெற்றான். இப்படி ஒவ்வொரு வேளை உணவுக்கும் தண்ணீருக்கும் தங்கம் கொடுத்துக் கொண்டே இருந்ததில் அவனிடமுள்ள தங்கம் எல்லாம் காலியாகி விட்டது. தன்னிடமுள்ள தங்கம் எல்லாம் காலியானதால் உண்ண உணவும், அருந்த நீரும் கிடைக்காமல் கங்காதரன் புழுப் போல் துடித்தான். இறுதியில் பொறுக்க முடியாமல் அவர்களது காலைப்பிடித்துக் கெஞ்சினான். இதற்குள் அவர்களது தலைவனே வந்துவிட, அவனிடம் தன் துன்பத்தைச் சொல்லி கங்காதரன் கதறி அழுதான்.

உடனே தலைவன் ''கங்காதரா, ராமநாதனையும் மற்ற கிராமத்தவர்களையும் நீ ஏமாற்றிப் பணம் பறித்த போது அவர்கள் இப்படித்தானே துடித்திருப்பார்கள்!'' என்று கேட்டான். அவனது குரலைக் கேட்ட மாத்திரத்தில் அவன் யாரென கங்காதரன் தெரிந்து கொண்டான். அடுத்த கணம் அவனது கால்களைப் பற்றிக் கொண்டு ''ராமநாதா என்னை மன்னித்துவிடு. பேராசையின் வசப்பட்டு உன்னையும், கிராமத்து மக்களையும் ஏமாற்றிப் பணம் பறித்தேன். ஒரு மருத்துவன் செய்யக் கூடாததெல்லாம் தர்மத்திற்கு புறம்பாகச் செய்தேன். நீ என் கண்களைத் திறந்து விட்டாய்'' என்று கங்காதரன் அழுதான். அவனை மன்னித்த ராமநாதன் மீண்டும் கிராமத்திற்குத் திரும்பினார். அந்த சம்பவத்திற்குப் பிறகு மனம் மாறிய கங்காதரன் தன் பேராசையை கைவிட்டான்.



# சூர்யா

13

வீர இளவரசனின் துணிகரச் செயல்கள்

சாந்திபுரத்து மன்னர் சாந்திதேவரை, அவரது சேனாபதி வீரசிம்மன் நயவஞ்சகமாக அரியணையிலிருந்து அகற்றி அவரைக் கொன்று விட ஏற்பாடு செய்தான். அந்த சதியிலிருந்துத் தப்பித்துக் கொண்ட மன்னர் காட்டில் ஜெயாநந்த முனிவரை சந்திக்கும் போது, தன் புதல்வன் உயிரோடு இருப்பதையும் தனது மனைவி இறந்து விட்டதையும் அறிகிறார். தன்னுடைய மகனை சந்திக்க ஆவலாயிருந்த மன்னரை முனிவர் தடுக்கிறார்.

ஓவியம் : காந்தி அய்யா















புரட்சிக்காரர்கள் வீரசிம்மனிடமிருந்து தப்புவதற்காக தங்களது இருப்பிடத்தை அடிக்கடி மாற்றிக் கொண்டே இருக்கின்றனர்.



இந்த இடம் மிகவும் பாதுகாப்பான இடமாகத் தோன்றுகிறது. நாம் சில நாட்கள் இங்கேயே தங்கி நமது வேலைகளை கவனிப்போம்

அப்படியே ஆகட்டும் ஐயா!

புரட்சிக்காரர்கள் அடிக்கடி தங்கள் இருப்பிடமான குகைகள், சுரங்கங்களின்று வெளி வந்து வில் வித்தை பயிற்சி செய்கின்றனர். அவர்களில் சிலர் குடிமக்கள் படைவீரர்கள் ஊடே செய்திகள் திரட்டுவதற்காக...



...மாறு வேடத்திலும் பவனி வருகின்றனர்

வசந்தனிடம் இந்தச் செய்தியை உடனே சொல்ல வேண்டும்

நாம் கோவிந்த புரிக்குச் சென்று அரிசி மூட்டைகள் கொள்ளை அடிப்போம்

கோவிந்தபுரிக்கு வந்த வீரசிம்மன் ஆட்களை மாறு வேடமணிந்த புரட்சிக்காரர்கள் வளைத்துப் பிடித்தனர். வீரசிம்மன் ஆட்கள் சமாளித்துக் கொண்டு தப்பி விட்டனர்.



புரட்சிக்காரர்கள் மாறு வேடமணிந்து திரிவது வீரசிம்மனின் ஆட்களுக்குத் தெரிய வருகிறது.










சோதிடக்காரர் உள்ளே நுழையும் போது தலையில் இடித்துக் கொள்ள செயற்கை முடி நழுவுகிறது




அதுதான் வசந்தன். வசந்தன் வேகமாக ஓடி விடுகிறான்.




படை வீரர்கள் வசந்தனைத் துரத்துகிறார்கள்




குதிரை வீரன் படைவீரனை உதைத்துத் தள்ளுகிறான். வசந்தனை நோக்கி,




குதிரைவீரன் நதியை ஒரே தாவாக தாவி மறு கரையை அடைகிறான்...




...பிறகு, வசந்தனை கை கொடுத்துத் தூக்கத் தயாராக இருக்கிறான்.
என்னுடைய கையைப்பிடி. சீக்கிரம்!


தன்னை இவ்வாறு காப்பாற்றியவன் யார் என்று வசந்தன் நிமிர்ந்து பார்க்கிறான். அந்த சமயம் அந்த வீரனின் முகத்திரை விலகுகிறது.
ஹா! மகாராஜாவா!!


மகாராஜா! முன்னமே ஒருமுறை என்னை நீங்கள் தான் காப்பாற்றினீர்கள். உங்களுக்கு மிகவும் நன்றி.
உன்னுடைய வீரத்தைப் பாராட்டுகிறேன் வசந்தா! ஆனால்...


யாரிடமும் என்னைப் பற்றிச் சொல்லிவிடாதே
ஏன் கூடாது ராஜா? நாட்டைக் காப்பாற்ற நீங்கள் கட்டாயம் திரும்பி வர வேண்டும்


அதற்குரிய நேரம் இன்னும் வரவில்லை. நீ இப்போது தப்பி ஓடிவிடு
அப்படியே செய்கிறேன் மகாராஜா. உங்களது கட்டளைகளுக்குக் காத்திருக்கிறேன்.
தொடரும்

# மிருகங்கள் நமது நண்பர்கள்

வீணா தன் பெற்றோருடன் பொருட்காட்சிக்குச் சென்றிருந்தாள். தாயுடன் கூடிய குழந்தையின் உருவ பொம்மையை தத்ரூபமாக செதுக்கி அங்கு பார்வைக்கு வைக்கப் பட்டிருந்ததைக் கண்டு கவரப்பட்ட வீணா தன் தந்தையிடம் அது எவ்வளவு அழகாக உள்ளது என்று தன் அபிப்பிராயத்தை வெளியிட்டாள்.

''வீணா, அந்த அழகான பொம்மையின் பின்னணியில் உள்ள பயங்கரம் தெரியுமா உனக்கு? அது யானையினுடைய தந்தத்தால் செய்யப்பட்டது. அழகான தந்தங்களுக்காக நூற்றுக்கணக்கான யானைகள் கொல்லப்படுகின்றன. இதனால் யானைகள் இனமே அழிந்துவிடும் அபாயத்தைப் பற்றித் தெரியுமா உனக்கு'' என்று வீணாவின் தந்தை கேள்வி மேல் கேள்வியாக அடுக்கினார்.

''ஐயோ, கேட்கவே பயங்கரமாக உள்ளதே! இதைத் தடுக்க முடியாதா அப்பா?'' என்று வீணா படபடப்புடன் கேட்டாள். ''அரசாங்கம் தந்தத்தால் செய்த பொருட்களை விற்கத் தடை விதித்துள்ளது. அப்படியும் இந்த அக்கிரமங்கள் நடந்து கொண்டு தான் உள்ளன. யானைகள் மட்டுமல்ல, இவ்வாறு துன்புறும் மற்ற உயிர்களும் உள்ளன. ரோமங்கள் அடர்ந்த தோலுக்காக, ஆயிரக்கணக்கான முயல்கள் கொல்லப்படுகின்றன. இவற்றின் மூலம் கண் கவர் பொம்மைகள் மற்றும் பலவித பொருட்களையும், செய்கின்றனர் என்று வீணாவின் அப்பா கூறினார்.

''அப்பா, இதைத் தடுக்க என்னால் ஏதாவது செய்ய முடியுமா?'' என்றாள் வீணா.

அதற்கு அவள் தந்தை ''மிருகங்களின் தோலினாலோ உடல் உறுப்புகளிலிருந்தோ செய்யப்பட்ட பொருட்களை நீ வாங்காமல் இருந்தால், அதுவே மிருகங்களுக்கு நீ செய்யும் உதவியாகும்'' என்றார்.

''நீங்கள் சொல்கிறபடியே செய்வேன் அப்பா'' என்றாள் வீணா.

# உங்கள் பக்கங்கள் உங்கள் பக்கங்கள்

## உங்கள் விஞ்ஞானம்

### பால் பாயிண்ட் பேனா



இப்போது பெரும்பாலானோர் பால்பாயிண்ட் பேனாவையே எழுதுவதற்குப் பயன்படுத்துகின்றனர். பழைய காலத்து ஊற்றுப் பேனாக்களைப் போல் இந்த நவீன பேனாக்களிலிருந்து மை கசிவதில்லை.

இதற்கு பால்பாயிண்ட் பேனா என்று ஏன் பெயர் வந்தது தெரியுமா? இந்தப் பேனாவின் முனையில் உலோகத்தினால் ஆன ஒரு சிறிய பந்து உருண்டையாக உள்ளது. இந்தப் பந்தின் கீழே மை நிரப்பப் பட்டுள்ளது. நாம் எழுதும் போது கீழிருந்து வரும் மை பந்தினை இலேசாகத் தள்ளிவிட்டு பேனாவின் முனைக்கு வருகிறது. பால் பாயிண்ட் பேனாவின் மை ஒருவித எண்ணெய் கலந்து செய்யப்படுவதால் எளிதாக உலருவது இல்லை. 1880ம் ஆண்டிலேயே பால்பாயிண்ட் பேனா கண்டு பிடிக்கப் பட்டிருந்தாலும் ஹங்கேரி நாட்டு ஆராய்ச்சியாளர்களால் 1930ம் ஆண்டு பால்பாயிண்ட் பேனா பிரபலமாக்கப்பட்டது.

## உங்கள் சுற்றுப்புறம்

### விவசாயப் பூச்சி

விவசாயம் செய்ய நமக்கு மட்டும் தான் தெரியும் என்று நாம் நினைக்கிறோம். ஆனால் நாம் விவசாயம் செய்யத் தொடங்குவதற்கு முன்பாகவே எறும்புகளில் சில இனங்கள் காளான்களைப் பயிர் செய்யத் தொடங்கி விட்டன. பல லட்சக்கணக்கான ஆண்டுகளுக்கு முன், தங்களுடைய புற்றுகளில் காளான்களை எறும்புகள் வளர்க்கத் தொடங்கின. அழுகின நாட்பட்ட கனிகளில் படர்ந்த காளானைத் தற்செயலாக எறும்புகள் சுவைத்துப் பார்த்திருக்க வேண்டும் என்றும், அது மிகவும் சுவையாக இருப்பதைக் கண்டு அவற்றைத் தானே வளர்க்க முற்பட்டன என்றும் நம்பப் படுகிறது. அழுகிய காய் கனிகளையும், மக்கிய இலைகளையும் தன் புற்றில் கொண்டு வந்து சேர்த்து காளான்களை உருவாக்கி அவற்றை வளர்க்கின்றன. சில எறும்புகள் காளான்கள் நன்கு வளர பச்சை இலைகளையும் அரிந்து கொண்டு வருவதுண்டு. இப்படி வளர்க்கப்பட்ட காளான்கள் எறும்புகளுக்கு சுவையான உணவாகின்றன.



## உங்களுக்குத் தெரியுமா?

# காலை உணவை தவிர்க்கவேண்டாமே!

காலையில் படுக்கையிலிருந்து தாமதமாக எழுந்தால், காலை உணவு உட்கொள்ளாமலே மாணவர்களில் சிலர் பள்ளிக்குச் சென்று விடுவது உண்டு. இரவு முழுதும் எதுவும் உண்ணாமல் உறங்குவதால் நமது உடலிலுள்ள சக்தி குறைவாக



இருக்கும். அதை ஈடுகட்ட, காலையில் உணவு உட்கொள்வது மிகவும் நல்லது. நமது மூளை சிந்தித்து செயற்பட குளுகோஸ் என்ற சத்து மூளைக்குத் தேவைப்படுகிறது. காலை உணவைப் புறக்கணித்தால் இந்தச் சத்து மூளையை அடைவதில்லை. ஏற்கனவே உண்ட உணவிலுள்ள சத்து மூன்று மணி நேரத்திற்கு மேல் உடலில் தங்குவதில்லை ஆகையால் காலையில் பட்டினி கிடந்தால் மூளை சரியாக செயற்படாது. தவிர உடலிலுள்ள எல்லா உறுப்புக்களுமே சக்தி இழந்து சோர்வாக இருக்கும்.

## நம் இந்தியா

# கடவுள்களைப் பற்றி எந்தளவிற்குத் தெரிந்து வைத்திருக்கிறீர்கள்?

1. தேவர்களில் செல்வத்துக்கு அதிபதியாகக் கருதப் படுபவர் யார்?
   அ) இந்திரன் ஆ) அக்கினி
   இ) குபேரன்



2. மகாவிஷ்ணு மிகக் குள்ளமான மனிதனாகத் தோன்றிய அவதாரம் எது?
   அ) கூர்மாவதாரம்
   ஆ) வாமனாவதாரம்
   இ) வராகாவதாரம்



3. மனிதனுடைய இறப்புக்குக் காரணமாகக் கருதப்படும் தேவர் யார்?
   அ) வருணன் ஆ) இந்திரன்
   இ) எமன்



4. பிள்ளையாரின் வாகனம் எது?
   அ) எலி ஆ) யானை
   இ) கரடி



5. எந்த அம்பிகை கல்விச் செல்வத்தை நமக்குத் தருகிறாள்?
   அ) லட்சுமி ஆ) சரஸ்வதி
   இ) பார்வதி



(விடைகள் 78ம் பக்கம்)

# போட்டோ வாக்கியப் போட்டி



**இந்த போட்டோக்களுக்கு தொடர்புடையதாக ஒரு சொல்லாகவோ அல்லது சிறு வாக்கியங்களாகவோ எழுதி அனுப்புங்கள்.**



TATA NARAYANAMURTHY



TATA NARAYANAMURTHY

வாக்கியங்களைப் போட்டிக்கென உள்ள தபால் கார்டுகளில் எழுதி, இம்மாதம் 25-ஆம் தேதிக்குள் எமக்குக் கிடைக்குமாறு அனுப்புங்கள். சிறந்த வாக்கியங்களுக்குப் பரிசு ரூ.100/– போட்டி முடிவு அக்டோபர் 2004 இதழில் வெளியிடப்படும்.

போட்டோ வாக்கியப் போட்டி, அம்புலிமாமா, 82, டிஃபென்ஸ் ஆஃபீஸர்ஸ் காலனி, ஈக்காட்டுத்தாங்கல், சென்னை – 600 097.

**வாழ்த்துக்கள்!**

**ஜூன் 2004 இதழில் வெளியிடப்பட்ட போட்டியில் வெற்றி பெற்றவர் :**

**வி. ஜயஸ்ரீ**

**c/o வி.விஜயலட்சுமி**

*2/408*, முதல் தெரு

கற்பகாம்பாள் நகர்

கொட்டிவாக்கம், சென்னை-*600 041*.

**பரிசு பெற்றவை**





''ஜாதி மத பேதமில்லை
ஒரு குடும்பம் நாங்கள்;
மொழி இன பேதமில்லை
ஒரு தாய் குழந்தைகள் நாங்கள்.''

## 'நம் இந்தியா?' விடைகள் (பக்கம் 77)

1. குபேரன்.
2. வாமன அவதாரம்.
3. எமன்.
4. எலி.
5. சரஸ்வதி.

Printed and Published by B. Viswanatha Reddi at B.N.K. Press Pvt. Ltd., Chennai - 26 on behalf of Chandamama India Limited, No. 82, Defence Officers Colony, Ekkatuthangal, Chennai - 600 097. Editor : B. Viswanatha Reddi (Viswam)



# CHANDAMAMA

**(November 2004 issue)**

# CHILDREN'S SPECIAL

**Inviting young writers and artists (ages 6-15) to send original stories and drawings/paintings**

## STORIES

- Maximum 3 entries
- Entries can be in any language in which *Chandamama* is printed
- Number of words not to exceed 500
- Give a catchy title
- Selected entries will appear in all language editions.

## DRAWINGS

- Maximum 3 entries
- Minimum size 15 x 10 inches
- The theme of drawing /painting should be from Indian mythology - a short synopsis to accompany the entry
- If selected on the basis of their entries, the participants should be ready to travel to Chennai to illustrate stories
- Travel expenses will be met.

## GENERAL

- Attach passport size photo (colour)
- Attach separate sheet with details: name, age (date of birth), class, name of school, home address in full with PIN code, phone number, description of entries
- Entries to be certified by parent to be original/unaided work of participant
- Superscribe on the envelope : Children's Special



**CLOSING DATE :** September 10, 2004

**CHANDAMAMA INDIA LIMITED,**
**82, Defence Officers' Colony Ekkatuthangal**
**Chennai - 600097.**

